Estd. 2012

மாத இதழ்



The Serangoon Times

# தி சிராங்கூன் டைம்ஸ்

சிங்கைத் தமிழரின் சிந்தனை!

டிசம்பர் 2020 ■ இதழ்: 60

சிங்கப்பூர் பதிவு எண்: MCI(P)110/09/2020

ISSN: 27374386




நிறுவனர்

எம்.ஏ. முஸ்தபா,

சிங்கப்பூர் முஸ்தபா தமிழ் அறக்கட்டளை

musthafa@agccapital.co

+65 96190125

முதன்மை ஆசிரியர்

ஷாநவாஸ்

+65 80285757

மின்னஞ்சல் : editor@serangoontimes.com

பொறுப்பாசிரியர்

மஹேஷ்குமார்

ஆசிரியர் குழு

சித்ரா ரமேஷ், எம்.கே. குமார், தமீம் அன்சாரி

பதிப்பாளர்

THE SERANGOON TIMES PTE.LTD.

11 COLLYER QUAY

#07-03 THE ARCADE

SINGAPORE 049317

இணையம் : www.serangoontimes.com

விளம்பரம் : +65 6224 4872

சென்னை

கலாம் பதிப்பகம்,

கவிக்கோ மன்றம்,

6. இரண்டாவது பிரதான சாலை,

சி.ஐ.டி.காலனி, மயிலாப்பூர்,

சென்னை - 600 004,

பேச : +91-44 24997373

வடிவமைப்பு

டி. ராஜரத்தினம் nandharaja@gmail.com

சிராங்கூன் டைம்ஸ் பிரதியை டன்லப் ஸ்டிரீட் தமிழ்ப் புத்தக நிலையத்தில் பெற்றுக்கொள்ளவும்.

S$3, சந்தா ஆண்டுக்கு S$30

தமிழ்நாடு - Rs.15, ஆண்டு சந்தா Rs.200




## உள்ளே

● சிவானந்தம் நீலகண்டன்



குறிஞ்சிவேலன் என்ற பெயர் தமிழிலக்கிய வாசகர்களுக்குப் புதிய பெயரல்ல. கடந்த ஐம்பதாண்டுகளுக்கும் மேலாக மலையாள இலக்கியப் பிரதிகளைத் தமிழுக்கு மொழிபெயர்ப்பு செய்துவருபவர். எஸ்.கே.பொற்றெ காட்டின் ‘விஷக்கன்னி’, எம்.டி.வாசுதேவன் நாயரின் ‘இரண்டாம் இடம்’ ஆகிய புகழ்பெற்ற நாவல்கள் அவர் இதுவரை மொழிபெயர்ப்புச் செய்துள்ள 38 மலையாள நூல்களுள் அடக்கம். ‘விஷக்கன்னி’க்காக 1994ஆம் ஆண்டில் மொழிபெயர்ப்புக்கான சாகித்ய அகாதெமி விருதைப் பெற்றவர்.

விலாஸினி என்ற புனைப்பெயரில் எம்.கே.மேனன் எழுதிய ‘அவகாஸிகள்’ மலையாள நாவலைத் தமிழில் மொழிபெயர்த்து, இறுதிகட்ட செம்மைப்படுத்தும் பணிகளில் தற்போது ஈடுபட்டுள்ளார். இந்த நாவலின் கதைக்களம் மலாயா என்பதால் சிங்கப்பூர், மலேசியா வாசகர்களும் நாவலை ஆவலாக எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றனர். 4000 பக்கங்களைத் தாண்டும் இந்தப் பெரிய நாவல் 2021 இல் சாகித்ய அகாதெமி வெளியீடாக வரவுள்ளது.

‘திசை எட்டும்’ என்ற மொழியாக்கக் காலாண்டிதழை 2003ஆம் ஆண்டிலிருந்து குறிஞ்சிவேலன் வெளியிட்டு வருகிறார். இந்திய மொழிகளில் மொழியாக்கத்திற்கென்றே பிரத்தியேகமாக வெளியிடப்படும் ஒரே இதழ் இது. கால்நடை ஆய்வாளராகப் பணியாற்றி ஓய்வுபெற்றுள்ள குறிஞ்சிவேலன் தமிழகத்தின் கடலூர் மாவட்டத்தைச் சேர்ந்த குறிஞ்சிப்பாடியில் வசித்து வருகிறார். சமகாலத்தின் முக்கியமான இலக்கிய ஆளுமையான குறிஞ்சிவேலனுடன் ஓர் ஆழமான உரையாடல்.

**வாழ்க்கைப் பயணத்தில் பல இடங்களில் தடைக்கற்களைப் படிக்கற்களாக மாற்றியிருக்கிறீர்கள். அதிகாரியின் பழிவாங்கும் நடவடிக்கையால் ஒரு கேரள எல்லையோரப்பகுதிக்கு இடமாற்றம் செய்யப்பட்டபோது அங்கு ஓய்வுநேரத்தில் தொடக்கக்கல்வி மலையாளப் பாடநூல்களை வைத்துக்கொண்டு அரிச்சுவடியிலிருந்து மலையாள மொழியைக் கற்கத் தொடங்கி இலக்கியத்தில் சாகித்திய அகாதெமி விருதுபெறும் அளவுக்கு சாதிப்பது எல்லார்க்கும் ஆகக்கூடிய காரியமல்ல. வயது ஆன பிறகும் ஒரு மொழியைத் தன்முயற்சியால் ஆழமாகக் கற்பதற்கான மனநிலையை எப்படிப் பெற்றீர்கள்? ஆரம்பகாலத்தில் மலையாளம் கற்கும் முயற்சியை விட்டுவிடலாம் என்று எப்போதாவது தோன்றியதுண்டா?**

மொழிகளைக் கற்பதற்கு வயது ஒரு தடையே இல்லை. பிறமொழி இலக்கியங்களின்மேல் ஒருவருக்கு ஆர்வம் ஏற்பட்டு விட்டால், அதுவும் அம்மொழியிலேயே அவற்றைப் படிக்கவேண்டும், அதன் ஆழத்திற்குள் செல்ல வேண்டும் என்ற எண்ணம் கிளர்ந்துவிட்டாலே போதும், பிறமொழிகள் தாமாகவே நம்மிடம் வசமாகிவிடும்.

நான் எங்கள் கிராமத்திலுள்ள அரசுப்பள்ளியில்தான் ஆரம்பக்கல்வியும் உயர்நிலைப்பள்ளி படிப்பையும் படித்தேன். ஐந்தாம் வகுப்பு வரையில் தமிழ் மட்டும்தான் மொழிப் பாடம். ஆறாம் வகுப்புக்குப் போனபின்னர்தான் ஆங்கிலம் கற்கத் தொடங்கினேன். உயர்நிலைப்பள்ளியில் படிக்கும்போது 10ம் வகுப்பிலும் 11ம் வகுப்பிலும் இந்தியும் விருப்பப் பாடமாக இருந்தது. அப்போதைய காலகட்டத்தில் இந்தியின்மேல் அதிகம் விருப்பம் இல்லாமையால் தேர்வின்போதுகூட, அம்மொழியை கேலிசெய்வது போலத் தலைகீழாக எழுதி வைப்போம். அநேகமாக எல்லா மாணவர்களும் அப்படித்தான் எழுதினோம். காரணம் தேர்வில் வெற்றிபெற இந்தியில் தேர்வாக வேண்டுமென்ற கட்டாயம் இல்லையே. அதனால்தான் அப்படி எழுதினோம்.

நான் பள்ளி இறுதி வகுப்பிற்கு பின்புதான் தமிழின் சமகாலப் படைப்புகளையே படிக்க ஆரம்பித்தேன். முதன் முதலில் நூலகத்தில் எடுத்துப் படிக்கத் துவங்கிய நூல் கல்கியின் பொன்னியின் செல்வன். அதன்பின் நான் படித்த தமிழின் சமகாலப் படைப்புகளுக்கு எண்ணிக்கையே இல்லை. அவ்வளவு நூல்கள் படித்தேன். அந்த நேரத்தில் பிறமொழிகளிலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட பல படைப்புகள் என்னை மிகவும் கவர்ந்தன. அவற்றில் ஒன்று சுந்தரராமசாமியால் மொழியாக்கம் பெற்ற மலையாள நாவலான தகழியின் செம்மீன். அந்நாவலைப் படித்ததும் அம்மொழியிலேயே அதைப் படிக்க முடியுமா என்ற ஏக்கம், ஆவல் என் அடிமனதில் அன்று ஆழமாகப் படிந்து விட்டது.

காலம் ஓடியது. கால்நடை ஆய்வாளர் பயிற்சியை முடித்துவிட்டு மதுரை மாவட்டத்திலுள்ள நத்தம் என்கிற ஊரில் கால்நடைத்துறையில் பணியில் சேர்ந்தேன். சேர்ந்து ஓராண்டிற்குள் எனக்கும் மேலதிகாரிக்கும் மனத்தாங்கல் ஏற்படவே, கேரள எல்லையோரம் (அப்போது மதுரை மாவட்டம் இன்றைய திண்டுக்கல், தேனி, விருதுநகர் மாவட்டங்களை உள்ளடக்கிய பெரும் மாவட்டமாக இருந்தது.) செக்-போஸ்ட் பணிக்கு டெபுடேஷனாக மாறுதல் அளித்துவிட்டார். அந்த செக்-போஸ்டில் ஒரு உதவியாளருடன் தனிமையில்தான் பணியாற்றவேண்டும். பணிச்சுமை குறைவுதான். ஆனால், தங்குமிடமும் உணவு வசதியும் மிகமிக மோசமானவை. ஒரு டீ குடிக்க வேண்டுமென்றாலும் இரண்டு மைல்களுக்குமேல் நடந்து சென்றுதான் குடிக்க வேண்டும். உணவும் அப்படியே. ஆனாலும், நான் அதற்காக மனம் தளரவில்லை.

கேரள எல்லையோரமாக இருந்ததால் உணவு சாப்பிடப்போகும் இடத்தில் மலையாள மொழி இதழ்களைப் பார்த்ததும் என் உள்மனதில் உறங்கிக் கொண்டிருந்த மலையாளமொழி கற்கும் ஆர்வம் விழித்துக்கொண்டது.



> **நான் பணியாற்றிய இடத்திற்கு அருகிலுள்ள மலையாள மக்களோடு மக்களாகப் பழகியதால் அவர்களின் வாழ்வியலையும் கலாச்சாரத்தையும் என்னால் புரிந்துகொள்ள முடிந்தது. நீங்கள் நம்புவீர்களோ மாட்டீர்களோ, ஆறு மாதத்திற்குள் வார, மாத இதழ்களையும் நாவல்களையும் நன்றாகவே படிக்கத் தொடங்கிவிட்டேன்.**

பள்ளியில் படிக்கும் மாணவர்களிடம் சென்று அமர்ந்து மலையாளமொழி எழுத்துக்களை கற்கத் தொடங்கினேன். அப்பிள்ளைகளுக்கோ, வாலிபர் ஒருவர் பேண்ட் சட்டையெல்லாம் போட்டுக்கொண்டு தங்களிடம் வந்து மொழி கற்க ஆசைப்படுகிறாரே என்று மகிழ்ச்சியுற்று ஆர்வத்துடன் எனக்கு மலையாள மொழியைச் சொல்லிக் கொடுத்தார்கள். எனக்கும் அம்மொழியின்பால் இருந்த ஆர்வத்தால் எழுத்துக்களை விரைவாகக் கற்றேன்.

மலையாள மனோரமா, மாத்ருபூமி மற்றும் சில சினிமா மாத இதழ்களை வாங்கி வந்து எழுத்துக் கூட்டிப் படிக்கத் தொடங்கினேன். நடிகர்களின் படத்தின் கீழ் அச்சடிக்கப்பட்டிருக்கும் பெயர்கள் கூட்டெழுத்துக்களில் இருக்கும். அவற்றை எழுத்துக் கூட்டிப் படிக்கும்போது மிக எளிதாக மனதில் பதியத்தொடங்கின. பிரேம்நசீர், திக்குரிச்சி போன்ற பெயர்களைப் படிக்கும்போது கூட்டெழுத்துகள் மிக எளிதாக பதிந்தன.

அதோடு நான் பணியாற்றிய இடத்திற்கு அருகிலுள்ள மலையாள மக்களோடு மக்களாகப் பழகியதால் அவர்களின் வாழ்வியலையும் கலாச்சாரத்தையும் என்னால் புரிந்துகொள்ள முடிந்தது. நீங்கள் நம்புவீர்களோ மாட்டீர்களோ, ஆறு மாதத்திற்குள் வார, மாத இதழ்களையும் நாவல்களையும் நன்றாகவே படிக்கத் தொடங்கிவிட்டேன். மாத்ருபூமியில் வெளியான ஒரு விமர்சனக் கட்டுரையைத்தான் முதன்முதலில் மொழியாக்கம் செய்தேன். அதன்பின் மலையாற்று ராமகிருஷ்ணன் மாத்ருபூமியில் (1966ல்) தொடராக எழுதிக்கொண்டிருந்த ‘வேர்கள்’ நாவலை நானும் வாராவாரம் மொழிபெயர்த்துவந்தேன். அடுத்து வந்த அவருடைய ‘அஞ்சு சென்ட்’ நாவலையும் வாராவாரம் மொழிபெயர்த்தேன். இவையெல்லாம் பிற்காலத்தில் ‘தீபம்’ இதழில் தொடராக வந்தன.

ஆரம்பத்திலிருந்தே மலையாள மொழியை சமகாலப் படைப்புகளுடன் இணைத்து கற்கத் தொடங்கியதால் எனக்கு



அம்மொழியைக் கற்க மேலும் உற்சாகமாகத்தான் இருந்ததே தவிர விட்டுவிடலாம் என்ற எண்ணமே எழவில்லை.

**முதலில் சொந்தமாகப் புனைவு எழுத ஆரம்பித்துப் பிறகு மலையாளத்தின் சிறந்த எழுத்தாளர்களின் படைப்புகளைப் பார்த்து 'நாம் எழுதுவதெல்லாம் புனைவுகளா?' என்ற சிந்தனையால் மொழிபெயர்ப்பாளராகச் செயல்படத்தொடங்கியவர் நீங்கள். ஆனாலும் அடியாழத்தில் உங்களிடம் செயல்பட்டுக் கொண்டிருக்கும் புனைவு மனம்தான் உங்கள் மொழிபெயர்ப்புகளைத் தனித்துவமுள்ளதாக ஆக்குகிறது என்று நினைக்கிறேன். அது சரியா? ஒருவர் புனைவு மொழிபெயர்ப்பாளராக சிறப்பதற்கு மொழியறிவைத் தாண்டிய தேவைகள் ஏதுமுண்டா?**

பள்ளியிறுதி இறுதி வகுப்பு வரையில் நான் பாடங்களில் வரும் தமிழ் இலக்கியங்களைத் தவிர, தமிழின் சமகாலப் படைப்புகள் எதையும் படிக்கவில்லை. பள்ளி இறுதி வகுப்பு முடிந்தபின் பயிற்சி பெறாத இடைநிலை ஆசிரியர் பணி கிடைத்தது. அந்தக் காலக்கட்டத்தில்தான் எங்கள் ஊரில் நூலகம் புதிதாகத் திறந்தார்கள். நான் அதில் உறுப்பினராகி சமகால நாவல்கள், வரலாறுகள், கவிதைத் தொகுப்புகள் என தினம் ஒரு நூல் அல்லது இரண்டு நூல்கள் என எடுத்துப் படித்தேன். அவைகளைப் படிக்க படிக்க நாமும் ஏதாவது எழுதவேண்டும் என உந்துதல் என் மனதில் எழுந்தது.

அந்த வகையில்தான் மூன்றாண்டுகளில் ஐந்து சிறுகதைகளும் ஒரு குறுநாவலும் எழுதினேன். எழுதும்போது என்னவோ அவை எனக்கு உயர்வாகத்தான் மனதில் பட்டன. ஆனால், பிறமொழி படைப்புகளைப் படிக்கத் தொடங்கியதும் நான் எழுதியது எதுவுமே எனக்குப் பிடிக்கவில்லை. அதனால், சொந்தமாக புனைவதையே நிறுத்திவிட்டேன். ஏராளமான பிறமொழி படைப்பு களைத் தேடித் தேடி எடுத்துப் படிக்கத் தொடங்கினேன். அதற்கேற்றாற்போல் மலையாள மொழியைக் கற்றுக்கொண்டு அம்மொழிப் படைப்புகளைப் படிக்கத் தொடங்கியதும் நாம் சொந்தமாக எழுதுவதைவிட இம்மொழிகளில் உள்ள நல்ல படைப்புகளைத் தமிழுக்கு மொழிபெயர்க்கலாமே என்ற எண்ணம்தான் மேலோங்கியது.




ஏற்கெனவே என்னிடமிருந்த சொந்தப் புனைவு மனமும் நல்ல நூல்களை மொழியாக்கம் செய்து தமிழுக்குக் கொண்டுவர வேண்டும் என்ற உந்துதலும் இணைந்ததால்தான் நமக்கு மொழிபெயர்ப்பே போதும் என்று நிம்மதி பெற்றேன்.

ஒரு படைப்பை மொழிபெயர்க்கும்போது வார்த்தைக்கு வார்த்தை மொழிபெயர்ப்பது என்பது பொருள் சரியாக இருக்கலாம். அந்த வார்த்தைக்குப் பின்னுள்ள மக்களின் வாழ்க்கையும், பண்பாடும், கலாச்சாரமும் எல்லாம் அதில் இருக்க வேண்டும் என்பது மொழியாக்கத்தில் நான் கடைப்பிடித்த கொள்கை. அந்தவகையில் கேரள மக்களின் வாழ்வியலையும் அவர்களின் பண்பாட்டையும் நேரில் கண்டு அனுபவித்துப் பழகியதால் அம்மொழிப் படைப்புகளை மொழியாக்கம் செய்யும்போது என்னுடைய புனைவாகவே கொண்டுவர முடிகிறது. அதனால், மொழியாக்கமும் என் படைப்பே என்ற எண்ணத்தில் நான் வந்து விட்டதால், இது மொழியாக்கம் என்பதைவிட சொந்தப் படைப்பாகவே இருக்கிறது என்று விமர்சகர்கள் குறிப்பிடுகிறார்கள். இந்த இடத்தில் இன்னும் ஒன்றையும் இங்கு சொல்ல விரும்புகிறேன்.

ஒரு மொழிபெயர்ப்பாளன் மூலமொழி படைப்பின் கதைக்களனையும், மொழியையும், நடையையும், அப்படைப்பில் உள்ளார்ந்து நூலிழையாக ஓடும் ஆத்மாவையும் உணர்ந்து கொண்டால் மொழியாக்கமும் மிகச்சிறப்பான இடத்தைப் பெற்று வெற்றி பெறும். இவை என்னுடைய நீண்டகால அனுபவம் அளித்த பாடமாகும்.

மேலும், நான் எந்தப் படைப்பாளியின் படைப்பை மொழியாக்கம் செய்கிறேனோ அந்தப் படைப்பாளியின் மொழி நடையையும் மொழியாக்கத்தில் கொண்டுவர முயல்கிறேன். அது மட்டுமல்ல, நான் பணத்திற்காக மட்டும் மொழிபெயர்ப்பதில்லை. என் மனதுக்காகவே மொழியாக்கம் செய்கிறேன்.

**மொழிபெயர்ப்பாளர் முதல்தர இலக்கியவாதி அல்ல என்றும் மொழிபெயர்ப்பு குறித்த உதாசீனமும் தமிழிலக்கிய வாசிப்புச் சூழலில் இருந்ததாக உணர்ந்துள்ளீர்களா? தங்களின் அரை நூற்றாண்டுக்கால அனுபவத்தில் அது மாறிக்கொண்டு வருகிறதா?**

உங்களின் இந்தக் கேள்வி மிகவும் சரியானது. நான் மொழியாக்கம் செய்யவந்த தருணத்திலும்,

ஓரளவு தமிழ் வாசகர்களுக்கிடையே அறிமுகம் ஆன பின்பும்கூட தமிழிலக்கிய வாசகப்பரப்பில் மொழிபெயர்ப்பாளனாக நான் உதாசீனப்படுத்தப்பட்டிருக்கிறேன். மொழிபெயர்ப்பாளர்களுக்கென சாகித்திய அகாதெமி விருது வழங்கத் தொடங்கிய பின்தான் அவர்களுக்கு சிறிய அளவிலாவது மரியாதை கிடைக்கத் தொடங்கியது.

ஏன், எனக்கு முன்னால் மொழியாக்கத்தில் சிறந்து விளங்கிய அ.கி. ஜெயராமன், த.நா.சேனாதிபதி, த.நா. குமாரசாமி, சௌரி, ரா.வீழிநாதன், கிருஷ்ணையா, ந.தர்மராஜன் போன்ற மிகப்பெரும் மொழிபெயர்ப்பு ஜாம்பவான்களுக்கே தமிழிலக்கிய உலகில் சரியான அங்கீகாரம் கிடைக்கவில்லை. கா.ஸ்ரீ.ஸ்ரீ அவர்களுக்கு மட்டும்தான் கொஞ்சம் மரியாதை இருந்தது.

இன்னும் சொல்லப்போனால் அக்காலத்தில் ஒரு நூலை மொழிபெயர்த்த மொழிப்பெயர்ப்பாளரின் பெயரைக்கூட அட்டையில் போடமாட்டார்கள். மூல ஆசிரியரின் பெயரை மட்டும்தான் போடுவார்கள். உள்ளே முதல் பக்கத்தில்தான் மொழிபெயர்ப்பாளர் பெயர் இருக்கும். மொழிபெயர்ப்பாளர்கள் இல்லை என்றால் உலக இலக்கியங்கள் எவ்வாறு தமிழுக்கு வந்திருக்க முடியும்? அதனால் இப்படிப்பட்ட மொழி பெயர்ப்பாளர்களை இலக்கியவாதிகள் என்று சொல்லாமல் எப்படி அழைப்பது?

இவற்றையெல்லாம் உணர்ந்துவிட்டு தான் 'திசை எட்டும்' மொழியாக்க இதழை தொடங்கியபின் மொழி பெயர்ப்பாளர்களை கௌரவிக்கும் வகையில் பத்மஸ்ரீ நல்லி குப்புசாமி செட்டியார் அவர்களின் பொருளாதார உதவியுடன் 'நல்லி - திசை எட்டும்' மொழியாக்க விருது வழங்கத் தொடங்கப்பட்டது. அதன் மூலம் இதுநாள் வரையில் மொழியாக்க நூல் சார்ந்து 146 மொழிபெயர்ப்பாளர்கள் பரிசுத்தொகையுடன் கௌரவிக்கப்பட்டுள்ளார்கள். வயதான மொழிபெயர்ப்பாளர்கள் வாழ்நாள் சாதனையாளர் விருது பெற்றுள்ளார்கள்.





**திசை எட்டும் மொழியாக்கக் காலாண்டிதழை ஆரம்பித்தபின் இந்திய மற்றும் அயல்மொழி அறிஞர்கள் என்னுடன் இணைந்துள்ளதால் தமிழுக்குப் பிறமொழி இலக்கியங்களைக் கொண்டு வருவதுடன் பிறமொழிகளுக்கு தமிழ் இலக்கியங்களைக் கொண்டு செல்வதற்கும் எனக்கு நண்பர்கள் கிடைத்துள்ளார்கள்.**



2003-ம் ஆண்டுக்குப் பிறகு நான் திசை எட்டும் இதழ் ஆரம்பித்தபின் இந்நிலை தமிழகச் சூழலில் மாறி வருகிறது. தற்போது பல பதிப்பகங்கள் மொழியாக்க நூல்களை வெளியிடுகின்றன. பல சிற்றிதழ்கள் மொழியாக்கங்களுக்கு தாராளமாக இடம் வழங்குகின்றன. மொழிபெயர்ப்பாளர்களுக்கு விருதுகள் வழங்குகின்றனர். ஏன், தமிழக அரசின் தமிழ் வளர்ச்சித்துறையினர் ஆண்டு தோறும் 10 மொழிப்பெயர்ப்பாளர்களுக்கு தலா ரூபாய் ஒரு லட்சம் வீதம் பரிசு வழங்கி கௌரவிக்கிறார்கள்.

பிற மொழிகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது தமிழிலுள்ள ஜனரஞ்சக இதழ்கள்தான் மொழியாக்கங்களை இன்னும் வெளியிடுவதில்லை. ஜனரஞ்சக இதழ்களில் ஆனந்தவிகடன் மட்டும் தங்கள் ஆண்டு விழாவில் மொழிபெயர்ப்புக்கு விருது வழங்குகிறார்கள். இருந்தும் அவ்விதழில் மொழியாக்கப் படைப்புகளை வெளியிடவில்லை என்பது குறையே.

ஒட்டுமொத்தமாகப் பார்க்கும்போது தற்போதைய சூழலில் சிற்றிதழ்கள் மொழியாக்கப் படைப்புகளை வெளியிட்டு மொழிபெயர்ப்பாளர்களை இலக்கியவாதிகளாக ஏற்றுக் கொண்டுள்ளார்கள். இந்த நிலை ஜனரஞ்சக இதழ்களிலும் வந்தால் தமிழ் மொழியாக்க உலகம் இன்னும் சிறப்படைவதுடன் பல உலக இலக்கியங்களை தமிழுடன் ஒப்பிட்டு நோக்க உதவியதாகவும் இருக்கும்.

**தமிழிலிருந்து மலையாளத்திற்கு மொழிபெயர்த்து தமிழின் முக்கியமான புனைவுப் படைப்புகளை மலையாளத்தில் அறிமுகம் செய்யும் எண்ணமுண்டா? இந்திய இலக்கியத்தில் முதலில் வங்காள இலக்கியம், அடுத்ததாக மலையாள இலக்கியம் என்ற கருத்துடையவர் நீங்கள். நவீனத் தமிழிலக்கியம் அவ்வரிசையில் உங்களைப் பொறுத்தவரை இப்போது எந்த இடத்தில் இருக்கிறது?**

நிச்சயம் உண்டு. மலையாளத்திற்கு மட்டுமல்ல, தென்னிந்திய மொழிகளான கன்னடம், கொங்கணி, தெலுங்கு மற்றும் இந்திக்குக் கூட நவீன தமிழ்

இலக்கியங்களைக் கொண்டு செல்ல தீவிரமாகச் செயல்பட்டுக்கொண்டிருக்கிறேன்.

இம்மொழிகளுக்கு அந்தந்த மொழிகளைத் தாய்மொழியாகக் கொண்ட அறிஞர்கள் கொண்டு செல்லும்போதுதான் அது மொழிபெயர்ப்பாக இல்லாமல் சொந்த புனைவு இலக்கியமாக இருக்கும் என்பது என்னுடைய அனுபவம் கண்ட உண்மை. அந்த வகையில் மொழிபெயர்க்கப்படும் நூல்கள் மொழிபெயர்ப்பாக இல்லாமல் மொழியாக்கமாக இருக்கின்றன. தாய்மொழி அல்லாதவர்கள் ஒரு மொழியிலிருந்து இன்னொரு மொழியில் மொழிபெயர்க்கும்போது அவை மொழியாக்கமாக இல்லாமல் மொழிபெயர்ப்பாக இருக்கின்றன. மொழியாக்கத்துக்கும் மொழிபெயர்ப்புக்கும் உள்ள வேறுபாடு இதுதான்.



அதனால், என்னைப் பொருத்தமட்டில் பிற மொழிகளிலிருந்து தமிழுக்குத்தான் மொழியாக்கம் செய்கிறேன். தமிழிலிருந்து பிற மொழிகளுக்கு மொழிபெயர்ப்பதில்லை. செய்துபார்த்தேன். திருப்தியில்லை. அதனால், நிறுத்திக் கொண்டேன்.

மலையாள மொழியைத் தாய்மொழியாகக் கொண்ட மொழிபெயர்ப்பாளர்கள் என் தொடர்பில் பலர் நண்பர்களாக இருக்கிறார்கள். அவர்களில் பலர் பழந்தமிழை பிழையில்லாமல் மொழியாக்கம் செய்பவர்களும் நவீனத் தமிழிலக்கியங்களை தவறில்லாமல் மொழியாக்கம் செய்பவர்களுமாகப் பிரித்து வைத்துள்ளேன்.

இவர்களில் தற்போது ஷாபி செருமாவிலாயி, கே.எஸ்.வெங்கடாஜலம், டாக்டர்.டி.எம்.ரகுராம், திருமதி.ஷைலஜா ரவீந்திரன், திருமதி.மினிப்பிரியா போன்றவர்கள் நவீனத் தமிழ் இலக்கியங்களைச் சிறப்பாக மொழியாக்கம் செய்கிறார்கள். இவர்கள் மூலம்தான் நவீனத் தமிழ் இலக்கியங்களை மலையாளத்திற்கு மொழியாக்கம் செய்யச் சொல்கிறேன்.

சங்க இலக்கியங்களைச் சேர்ந்த பதினெண்கீழ்க்கணக்கு நூல்களை மலையாளம், தெலுங்கு, இந்தி மொழிகளுக்கு மொழியாக்கம் செய்யும் பொறுப்பை தமிழக அரசு என்னிடம் ஒப்படைத்தது. மலையாள மொழியில் கே.ஜி. சந்திரசேகரன் நாயரிடம் பொறுப்பை ஒப்படைத்தேன். 1000 பக்கங்கள் கொண்ட அந்த நூலை கவிதை வடிவிலேயே மொழியாக்கம் செய்து அதற்கு பொருளுரையும் தந்து தமிழ்ப் பாடல் வரிகளையும் மலையாள லிபியிலும் கொடுத்தார். இதேபோல் இந்தியில் திருமதி..இராஜலட்சுமி சீனுவாசனும், தெலுங்கில் எல்.ஆர்.சுவாமியும் மொழியாக்கம் செய்தார்கள்.

திசை எட்டும் மொழியாக்கக் காலாண்டிதழை ஆரம்பித்தபின் இந்திய மற்றும் அயல்மொழி அறிஞர்கள் என்னுடன் இணைந்துள்ளதால் தமிழுக்குப் பிறமொழி இலக்கியங்களைக் கொண்டு வருவதுடன் பிறமொழிகளுக்கு தமிழிலக்கியங்களைக் கொண்டு செல்வதற்கும் எனக்கு நண்பர்கள் கிடைத்துள்ளார்கள்.

இக்கேள்வியிலேயே நவீனத் தமிழிலக்கியம் வங்காளம் மற்றும் மலையாள நவீன இலக்கியத்துடன் ஒப்பிடும்போது இப்போது எந்த இடத்தில் இருக்கிறது என்னும் கேள்விக்கு என்னுடைய பதில் இதுதான்-

இரண்டாயிரம் வரையில் நவீனத் தமிழிலக்கியம் மேற்கண்ட இருமொழி இலக்கியப் படைப்புகளிடமிருந்து பின்தங்கித்தான் இருந்தது. 2000ஆண்டு முதல் நவீனத் தமிழிலக்கியம் அசுர வளர்ச்சியைப் பெற்றுள்ளது. இன்று அது முதலிடம் பெறும் அளவிற்கு வளர்ந்துள்ளது என்றால் மிகையாகாது. இதற்குக் காரணம் உலகின் மற்றும் இந்தியாவின் நவீன இலக்கியங்கள் பெருமளவில் தமிழில் மொழியாக்கம் பெற்றதால்தான்.

பிறமொழிகளின் படைப்புகளோடு தமிழ் படைப்பாளிகள் தங்கள் படைப்புகளை ஒப்பிட்டுப் பார்த்து அவ்விலக்கியங்களுக்கு சமமாகவோ அவற்றுக்கு மேலாகவோ நாமும் படைக்கவேண்டும் என்னும் மனநிலைக்கு வந்ததால்தான் தமிழின் நவீனப் படைப்புகள் இந்திய அளவில் முதலிடத் தகுதியை பெற்று வருகின்றன.

**இறுதிப்பகுதி அடுத்த இதழில்...**

முனைவர் அ.வீரமணி



# சிங்கப்பூர் இந்தியர் சமுதாயத்தில் பிரிவினையும் ஒருமைப்பாடும்

கட்டுரை வெளியீடு:

**3வது தமிழ் இளையர் ஆய்வரங்கக் கட்டுரைத் தொகுப்பு, தமிழர் பேரவை இளையர் மன்ற வெளியீடு, 1984, பக். 27-35**

ஒவ்வொரு நாளும் நாம் தொலைக்காட்சியில் எதையாவது பார்க்கிறோம்; அவ்வாறு பார்க்காவிட்டாலும், எப்போதாவது ஒரு முறையாவது பார்க்கிறோம். சிங்கப்பூர் ஒலிபரப்புக் கழகத்தின் நிகழ்ச்சிகள் தொடங்குவதற்கு முன்னர் நான்கு பெண்மணிகள் குடியரசின் நான்கு அரசியல் மொழிகளிலும் வரவேற்பு கூறுகின்றனர்.

சீனத்தில் பேசுபவருக்குப் பின்னால், பழைய சமுதாயக் காட்சி படமாக்கப்படுவதற்கான தயாரிப்பு நடப்பதைக் காட்டினாலும், அதில்

காணப்படும் ஒவ்வொருவரும் ஏதோ ஒரு குறிக்கோளை நோக்கிச் சுறுசுறுப்புடன் செயல்படுவது பார்ப்பவர்களுக்குத் தெரிகிறது. இதைப் போலவே மலாய் மொழி அறிவிப்பாளர் பின்னிலையிலும் சமுதாய ஒருங்கிணைப்பு முக்கியமாக உணர்த்தப் படுகிறது. தமிழ் அறிவிப்பாளர் மூன்றாவதாகத் தோன்றினாலும் முதலில் ஆங்கில அறிவிப்பாளரைக் குறிப்பிட்டு விடுகிறேன். அவர் வரவேற்பு கூறி முடிந்ததும் சிங்கப்பூர் கணினி மையத்தை நோக்கிச் செல்வதற்கான படம் காட்டப்படுகிறது. குறிக்கோளை நோக்கிய உழைப்பு, சமுதாய ஒருங்கிணைப்பு, கணினி மயத்தின் மங்களகரமான நாளைய உலகம் - இவைதான் தமிழ் தவிர்த்த இதர சிங்கப்பூரார் போற்றும் குணங்கள்.

இனி இந்தியர்களின் மொழியாகப் பயன் படுத்தப்படும் தமிழ் அறிவிப்பினை எடுத்துக் கொள்வோம். கருநீலச் சாயம் பூசப்பட்ட ஒருவர், அவர் கண்ணனைக் குறிக்கிறார். அவர் இரண்டு பக்கத்திலும் இழுக்கப்பட்டு அலைக்கழிக்கப்படுகிறார். இவர்களுக்குப் பின்னணியில் சில இசைக் கலைஞர்கள், இவர்களின் தலை அசைவும், உடல் அசைவும் இக்காட்சியைக் குறிக்கோளில்லாத பைத்தியக்காரர்களின் கூத்தாகக் காட்டுகிறது. இந்தப் பின்னணியின் முன்னால் அழகிய மாது ஒருவர் தோன்றி வரவேற்பு கூறி மறைகிறார்.

இந்தத் தொலைக்காட்சி வரவேற்பு நிகழ்ச்சி சிங்கப்பூர்ச் சமுதாயத்தைக் காட்டுகிறது என்றால், இந்தச் சமுதாயத்தின் நிலையைத் தொடர்ந்து கண்ணோட்டம் செய்வோம்.

இந்தக் கட்டுரை எதிர்காலச் சிந்தனைகளை அடிப்படை நோக்கமாகக் கொண்டது. இந்தியர் சமுதாயம் என்ற சொல்லைப் பல சூழ்நிலைகளில் நாம் கேட்கிறோம். அப்படிப்பட்ட ஒரு சமுதாயம் இருக்கிறதா? அப்படி இருந்தால், ஏன் சமுதாயம் என்று ஒன்று இருப்பதாகப் பல சூழ்நிலைகளில் நமக்குத் தோன்றவில்லை? இந்தியர் சமுதாயம் என்ற சிந்தனை சமுதாய ரீதியில் இல்லை என்றால் இந்தியர்கள் எவ்வாறு இந்தியர்களாக தொடர்ந்து கருதப்படுகின்றனர்? சிங்கப்பூரைப் பொருத்தவரையில் இந்தியர்கள் என்றால் யார்? சிங்கப்பூர் இந்தியர்கள், இந்தியர்களாக இயங்காவிட்டால், பிறர் கண்களுக்கு ஏன் அவர்கள் இந்தியர்களாக தோன்றுகின்றனர்? இது போன்ற ஐயங்களால் நான் கடந்த பத்து ஆண்டுகளாக அலைக்கழிக்கப்பட்டு வந்துள்ளேன். அந்த குழப்பங்களை உங்களோடு பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன். பகிர்ந்துகொள்ளும் சூழலிலும் இன்னும் பதினைந்து ஆண்டுகளுக்கு, அதாவது அடுத்த நூற்றாண்டின் தொடக்கத்திற்குள் இந்தியர் சமுதாயம் என்று சொல்லப்படும் சமுதாயம் எவற்றையெல்லாம் செய்தால், தொடர்ந்து ஒரு சமுதாயமாக கருதப்படலாம் என்பதையும் இக்கட்டுரையில் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.



சிங்கப்பூர்ச் சூழலில் இந்தியர் என்றால் என்ன? தாய்மொழியால், பயன்படுத்தப்படும் மொழிகளால், சமய வேறுபாடுகளால், பொருளாதார ஏற்றத்தாழ்வுகளால், கல்வி வேறுபாடுகளால், சமூக அமைப்புகளால், பல்வேறு வழிகளில் பிரிக்கப்பட்டு பிரிந்து வாழும் சமூகம் தான் சிங்கப்பூர் இந்தியர் சமூகம். முதலில் மொழியால் ஏற்படும் பிரிவினையை புரிந்து கொள்வோம். 1980ல் சிங்கப்பூர் இந்தியர்களின் எண்ணிக்கை 154,632 இவர்களில் 64 விழுக்காட்டினர் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள். இதர இந்திய மொழிகளில் முக்கியமாக விளங்குபவை மலையாளம், பஞ்சாபி. இந்தியர்களில் 8 விழுக்காட்டினர் மலையாளத்தையும் மேலும் 8 விழுக்காட்டினர் பஞ்சாபியையும் தாய் மொழியாகக் கொண்டுள்ளனர். வங்காள மொழி, குஜராத்தி,



**சமயமும் இந்தியர்களை இந்தியர்களாக இருக்க உதவி வருகிறது. தைப்பூசம் சிங்கப்பூரில் நடக்கும் பொது விழா. அதில் தமிழர் தமிழர்களாகப் பெருமிதம் அடைகின்றனர். இதர மக்கள் இந்தியர்கள் இருப்பதை உணர்கின்றனர். தீபாவளி இல்லத்தில் நடக்கும் விழா. இன உணர்வைத் தராத விழாவாக இருந்தாலும் அனைத்து சிங்கப்பூரரும் சிங்கப்பூரில் இந்தியர்களும் இருக்கின்றனர் என்பதை உணரவைக்கும் விழா.**

தெலுங்கு, சிங்களம் ஆகிய மொழிப் பிரிவினர் ஒரு விழுக்காட்டுக்குக் கூட அதிகமானவர்களாக இல்லை. தாய்மொழி எனக் குறிப்பிட முடியாத சிறுபான்மை இந்தியர்கள் 19 விழுக்காட்டினர் உள்ளனர். இவர்களின் எண்ணிக்கை 1970 க்கும் 1980 க்கும் இடைப்பட்ட பத்தாண்டுகளில் 8 விழுக்காட்டிலிருந்து 19 விழுக்காட்டிற்கு உயர்ந்துள்ளது. புதிதாக குடியேறியுள்ள இந்தியர்கள் எந்த மொழி பேசுபவர்கள் என்பது புதிராக உள்ளது. மொழியால் இந்தியச் சமுதாயம் பிரிவினைக்கு உள்ளாகி இருந்தாலும், அவர்களில் பெரும்பாலோர் தமிழர்கள். மலையாள மொழியைத் தாய்மொழியாகக் கொண்டு உள்ளவர்களோடு தமிழரை இணைத்தால், தென்னிந்தியர்களின் தொகை 72 விழுக்காடாக உள்ளது.

அன்றாடம் பயன்படுத்தும் மொழியால் இந்தியச் சமுதாயம் எவ்வாறு பிளவுபட்டு இருக்கிறது என்று பார்ப்போம். 1980ல் எழுதப் படிக்கத் தெரிந்த இந்தியர்களை எடுத்துக்கொள்வோம். இவர்களில் பத்து வயதுக்கு மேற்பட்டோரை எடுத்துக்கொள்வோம். அவ்வாறு பார்க்கும்போது 59 விழுக்காட்டினர்தான் தமிழறிவு உள்ளவர்களாக இருக்கின்றனர். எஞ்சியவர்களில் 45 விழுக்காட்டினர் ஆங்கிலம் மட்டும் அறிந்தவர்களாக இருந்தனர். எனவே, இந்தியர்கள் மத்தியில் வாழும் ஒரே இந்திய மொழியாக இருப்பது தமிழ் ஒன்றுதான்.

சமய அடிப்படையிலும் இந்தியர்கள் பிரிந்து வாழ்கின்றனர். சுமார் 8 விழுக்காட்டினர் சீக்கியர்கள். பெரும்பான்மையினர் இந்துக்கள், அடுத்து குறிப்பிடப்பட வேண்டியவர்கள் முஸ்லீம்கள். கிறித்தவர்கள் அடுத்த நிலையை வகிக்கின்றனர்.

பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் நமது சமுதாயத்தில் இன்றும் தொடர்கின்றன. 1980ல், வேலை செய்த இந்தியர் ஒருவரின் சராசரி வருவாய் $360 அல்லது அதற்கும் குறைவாக இருந்தது. குறைந்த எண்ணிக்கையிலான இந்தியர்கள் உயர்பதவிகளிலும், ஏனையோர் நடுத்தர வேலைகளிலும், இன்னும் பலர் பணியாளர் பதவிகளிலும் ஈடுபடுகின்றனர். பதவிகளின் அடிப்படையில் சமுதாயம் பிரிவுபட்டுக் கிடக்கிறது.

கல்வித்தகுதி அடிப்படையில் இந்தியச் சமுதாயம் பிளவுபட்டுக் கிடக்கிறது. அதிகம் படித்தவர்களுக்கும், பள்ளிப் படிப்போடு படிப்பை விட்டவர்களுக்கும் இடையில் தொடர்பு இல்லை. அதிக பட்டதாரிகள் இல்லாத சமுதாயத்தில், படித்துப் பட்டம் பெற்றவர்கள் சமுதாய நலன் கருதி உதவ முன்வர முடியாத நிலை இன்னும் நிலவுகிறது. பதிவு செய்யப்பட்ட இந்தியச் சமூக அமைப்புகளின் எண்ணிக்கை சுமார் 120. இவற்றில் பாதி தமிழர் அமைப்புகள். சீக்கியர்களுக்குச் சுமார் 18 அமைப்புகளும், மலையாள மொழி பேசுவோருக்கு 17 அமைப்புகளும் உள்ளன. எஞ்சியவை இதர பல இந்திய உட்பிரிவினரின் அமைப்புகளாக உள்ளன. இவற்றில் ஒருசில இந்தியர் என்ற பெயரின் கீழ் இயங்கினாலும், அனைத்து இந்தியர்களையும் இணைக்க முடியாத அமைப்புகளாக இயங்குகின்றன. ஒவ்வொரு மொழிப்பிரிவினரின் சமூக அமைப்புகளும், பின்பற்றும் சமயத்தால், பொருளாதார வகுப்பால், இந்தியத் துணைக்கண்டத்திலுள்ள ஜில்லாக்களால், ஜாதியால் பிளவுபட்டு வாழ்ந்து கொண்டிருக்கின்றன.

இந்தியர்களை இந்தியர்களாகப் பேசுவதை விடுத்து, மொழிவாரியாகப் பார்த்தாலும், அங்கும் சமயம், பொருளியல் வேறுபாடு, கல்வித்தகுதி, சாதி, இந்தியாவிலுள்ள வட்டாரம் ஆகிய அடிப்படைகளில் பிரிவினையே நமக்குத் தெரிகிறது.

இதுவரை கூறிய கருத்துக்கள் இந்தியர்களிடையே அதிக வேறுபாடுகளைக் காட்டியிருக்கும். இவ்வளவு வேறுபாடுகளுக்கு இடையிலும் இந்தியர்களால் எவ்வாறு இந்தியர்களாகத் தொடர்ந்து இருக்க முடிகிறது? இதற்கு, சிங்கப்பூர் இந்தியர்களின் வரலாறு சில காரணங்களை வழங்குகிறது.

### வரலாறு தரும் விளக்கம்

சிங்கப்பூரின் காலனித்துவ வரலாறும், அரசும் இந்தியத் துணைக்கண்டத்தில் இருந்து வந்தவர்களை எப்போதும் இந்தியர்களாகவே கண்டு வந்துள்ளது.




சிங்கப்பூரின் தொடக்ககால வரலாற்றில் கிள்ளிங், பெங்காளி, முசால்மன், பார்சி என்று இந்தியர்களைப் பிரித்துக் கூறி இருந்தாலும் காலப்போக்கில் பிரிட்டிஷ் காலனித்துவ வாதிகள் அனைவரையும் இந்தியன் என்றே குறிப்பிட்டு அதனை வரலாறு மறவாத பட்டப்பெயராக நமக்குச் சூட்டிவிட்டுச் சென்றனர். இப்பட்டப்பெயர் இன்றும் தொடர்கிறது.

சிங்கப்பூர் வரலாற்றில் தொழிற்சங்கங்கள் முதலில் அரசியலுக்கு வித்திட்டன. தொழிற்சங்கங்கள், அரசியல் ஆகிய இரு துறைகளிலும் இந்தியர்கள் குறிப்பாக தமிழர்கள் தலைவர்களாகவும், தொண்டர்களாகவும் பாடுபட்டுள்ளனர். இது அரசியல் அங்கீகாரத்தை இந்தியர்களுக்கு பெற்றுத் தந்தது.

காலனித்துவ ஆட்சியில் இருந்து இன்றுவரை இந்தியர்களின் இருப்பிடமாய் திகழ்ந்து வந்துள்ள முக்கியத் துறை அரசாங்கம். நாளைக்கு அரசாங்கத்தில் வேலை கிடைக்காது என்றால் பெரும்பாலான இந்தியர்கள் வேலை இல்லாதவர்கள் ஆகிவிடுவார்கள். ஆயினும் அரசாங்கப் பணிகளில் எல்லா நிலைகளிலும் இந்தியர்கள் இருப்பது அவர்களை ஓர் இனமாக மற்றவர்களுக்கும் நாட்டை ஆள்பவர்களுக்கும் உணர்த்தி வந்துள்ளது.

சிங்கப்பூர் இந்தியர்கள் மத்தியில் பிரிந்து வாழ்வதற்கு பல காரணங்கள் தெரிந்தாலும், அவர்கள் இந்தியர்களாகத் தொடர்ந்து இருப்பதற்கு இதுவரை வெளிக் காரணங்களையே கண்டோம். வெளிக்காரணங்கள் அனைத்தும் சிங்கப்பூரில் இந்தியர்கள் குறைந்த எண்ணிக்கையில் இருப்பதனால் நிகழ்ந்தவை என்பதைக் கோடிக் காட்டுகின்றன. இந்த வெளிக் காரணங்களுக்கு அப்பால் இந்தியர் சமுதாயத்திற்கு உள்ளேயும் இந்தியர்களை இந்தியர்களாக காட்டும் காரணங்கள் உள்ளன. இதர இன மக்கள் மத்தியில் சிறுபான்மையினராக உள்ள இந்தியர்கள், சீன, மலாய் சமூகங்கள் தனித்தனிச் சமூகங்களாக செயல்படும் நேரங்களிலெல்லாம் இந்தியர்களாய் செயல்பட்டுள்ளனர். இக்கருத்தினை பின்னர் விரிவாகக் காண்போம். சில சூழல்களில் இந்தியர்களாக அவர்கள் சிந்திக்காவிட்டாலும் தமிழர்களாக, சீக்கியர்களாக, மலையாளிகளாக, இந்துக்களாக, தமிழ் முஸ்லிம்களாக தங்களை வெளிப்படுத்தி தாங்களும் இந்த நாட்டில்

இருக்கிறார்கள் என்பதை உணர்த்தி வந்துள்ளனர். எனவே சீனர்கள் சீனர்களாக இருக்கும்வரை, மலாய்க்காரர்கள் மலாய்க்காரர்களாக இருக்கும்வரை, சிறுபான்மை இந்தியர்கள் சிங்கப்பூரில் இந்தியர்களாக தொடர்ந்து இருப்பர்.

சமயமும் இந்தியர்களை இந்தியர்களாக இருக்க உதவி வருகிறது. தைப்பூசம் சிங்கப்பூரில் நடக்கும் பொது விழா. அதில் தமிழர் தமிழர்களாகப் பெருமிதம் அடைகின்றனர். இதர மக்கள் இந்தியர்கள் இருப்பதை உணர்கின்றனர். தீபாவளி இல்லத்தில் நடக்கும் விழா. இன உணர்வைத் தராத விழாவாக இருந்தாலும் அனைத்து சிங்கப்பூரரும் சிங்கப்பூரில் இந்தியர்களும் இருக்கின்றனர் என்பதை உணரவைக்கும் விழா. அரசாங்கப் பொது விடுமுறை இந்த உணர்வை மேலும் வளர்த்து வருகிறது. சிங்கப்பூரில் உள்ள சுமார் 30 கோயில்களும் இந்தியர்கள் இருப்பதை நமக்கும், பிறருக்கும் உணர்த்துகின்றன.

சிங்கப்பூரில் இந்தியச் சமுதாயத்தை பிறர்க்கு உணர்த்தி நிற்கும் முக்கியக் காரணங்களாகத் தமிழையும், தமிழரையும் குறிப்பிடலாம். தமிழ் அரசியல் மொழி. பள்ளிகளில் பயிற்றுவிக்கும் மொழி. இந்தியர்களுக்கென இந்த நாடு தந்துள்ள ஒரேயொரு அரசியல் உரிமை தமிழ். இதன் வளர்ச்சியும், இதனையொட்டி நிகழ்த்தப்படும் நிகழ்ச்சிகளும் இந்தியர்களுக்கு அரசியல் அங்கீகாரத்தை பெற்றுள்ளது. தென்னிந்தியச் சமுதாயம் தமிழரையும் மலையாள மொழி பேசுவோரையும் உள்ளடக்கியது. அச் சமுதாயத்தின் இணைப்பு மொழியாகத் தமிழ் வளர்ந்து வருகின்றது. தென்னிந்தியச் சமுதாயம் நடத்தும் கலை நிகழ்ச்சிகள், ஆய்வரங்குகள் முதலானவை தமிழையே சார்ந்து இருந்தாலும் அவை பெரும்பான்மை இந்தியர்களை ஒருங்கிணைக்க உதவுகின்றன. இந்தியர்கள் என்ற குடை இல்லாமல் தமிழும் தென்னிந்தியரும் சிங்கப்பூரில் தனித்து அரசியல் ரீதியில் செயல்பட முடியும். ஆனால் தமிழையும், தமிழரையும் ஒதுக்கிவைத்துவிட்டு இந்தியர்கள் இந்தியர்களாக வாழ முடியாது.



**1959-க்குப் பிந்திய காலத்தில் அறிஞர் அண்ணாவின்கீழ் தமிழகத்தில் அரசவை ஏறிய திராவிட முன்னேற்றக் கழகம், சிங்கப்பூர் தமிழர்கள் பலருக்குப் பெருமை தந்தது.**

இந்தியர்களின் ஒருமைப்பாட்டுக்கு உதவும் மற்றொரு கருவி திருமணமும் ஜாதி உணர்வும். செட்டியார்கள், வெள்ளாளர்கள், கவுண்டர்கள், நாயுடுகள் எனப்பல பிரிவுகள் தமிழ் இந்துக்கள் மத்தியில் திருமணப் பிரிவுகளைத் தந்து பண்பாட்டின் அடிப்படைக் கூறுகள் சிலவற்றைப் பாதுகாக்க உதவுகின்றன. திருமணப் பிரிவுகளைத் தமிழ் முஸ்லிம்கள் மத்தியிலும், கிறித்துவர்கள் மத்தியிலும் காண்கிறோம். மலையாளிகள் மத்தியிலும் சீக்கியர்கள் திருமண உட்பிரிவுகள் சமுதாயப் பிளவை உணர்த்தினாலும், ஒரு நிலையில் இந்தியர்களின் அடிப்படை பண்புகள் சிலவற்றைப் பிறருக்கு உணர்த்தி நிற்கின்றன.

இவற்றிற்கும் அப்பால், சிங்கப்பூர் இந்திய சமூகத்தின் ஒற்றுமையையும், பிரிவினையையும் சிங்கப்பூருக்கு வெளியில் நடக்கும் நிகழ்ச்சிகள் ஓரளவு பாதிக்கின்றன. எடுத்துக்காட்டாக 1959-க்குப் பிந்திய காலத்தில் அறிஞர் அண்ணாவின்கீழ் தமிழகத்தில் அரசவை ஏறிய திராவிட முன்னேற்றக் கழகம், சிங்கப்பூர் தமிழர்கள் பலருக்குப் பெருமை தந்தது. தமிழகத்தில் நடந்த இந்தி எதிர்ப்பு தமிழர்கள் மத்தியில் பிற இந்திய மொழி பேசுவோரின் மீது சிறிது வெறுப்பைத் தூண்டியது. 1962ல் சீனா இந்தியாவை தாக்கிய போது அனைத்து இந்தியர்களும் மானசீக அடிப்படையில் ஒருமைப்பாட்டுடன் விளங்கினர். அவ்வாறே நேரு இறந்த போதும் ஒற்றுமை உணர்வோடு இருந்தனர். இந்திய பாகிஸ்தானிய போர்களின் போது இந்து-முஸ்லீம் வெறுப்பு சிறிது தென்பட்டது. இந்து-சீக்கிய கலவரம் சிங்கப்பூர் சீக்கியர்கள் பலரை தீபாவளியை வெறுக்கச் செய்தது. இந்திராகாந்தியின் மரணத்தைத் தொடர்ந்து அவருடைய உடல் தகனம் செய்யப்பட்ட அன்று சிராங்கூன் சாலையிலும் இதர இடங்களிலும் இந்திய வியாபாரிகள் கடையடைப்புச் செய்தனர். இந்திராகாந்தி இறந்த அன்று பல சீக்கியக்கடைகள் மூடப்பட்டன. ஆயினும் இந்தியத் துணைக்கண்டத்தின் நடப்புகள், நாளுக்கு நாள் சிங்கப்பூர் இந்தியர்களை அதிகம் கவர்வதாக தெரியவில்லை.

**இறுதிப்பகுதி அடுத்த இதழில்...**



சிவாநந்தம் நீலகண்டன்

# 2020 வைரஸ் வாழ்க்கை






னவரி (2020) மாதத்திலிருந்தே 'வூஹான் வைரஸ்' குறித்து சிங்கப்பூரில் பேச்சு அடிபட்டு வந்தாலும் அதை யாரும் பெரிதாக எடுத்துக்கொள்ளவில்லை. பல அமைச்சுகளும் சேர்ந்து சிங்கைக்குள் அத்தீநுண்மி நுழைந்தால் என்ன செய்யலாம் என்று திட்டமிட்டுக்கொண்டிருந்தனர். அதெல்லாம் அரசு பார்த்துக்கொள்ளும் என்று மக்கள் அவரவர் வேலையைப் பார்த்துக்கொண்டிருந்தனர். ஜனவரி 23ஆம் தேதி வூஹானிலிருந்த வந்த ஒரு முதியவர் சிங்கையின் முதல் கொரோனா தீநுண்மி தாக்கியவராக ஆனதுகுறித்த செய்திவந்தபோதுகூட சீனாவுக்குப்போனால் கிருமி தாக்கும்போலும் என்று போய்விட்டனர். வாழ்க்கை வழக்கம்போல ஓடிக்கொண்டிருந்தது.

பிப்ரவரி மாதத் தொடக்கத்தில் எனக்கு வேலை தொடர்பாக சிலநாட்கள் மலேசியா செல்லவேண்டியிருந்தது. வேலையை முடித்துக்கொண்டு 7ஆம் தேதி

வெள்ளிக்கிழமை மாலை சிங்கை திரும்பினேன். அசதியாக இருந்ததால் நேரத்தோடு உறங்கப்போய்விட்டேன். அந்த ஆழ்ந்துறங்கிய அந்த நேரத்தில்தான் சிங்கையே அல்லோலகல்லோலப் பட்டுக்கொண்டிருந்திருக்கிறது.

நோய்ப்பரவல் விழிப்புணர்வு நிலை (*DORSCON*) ஆரஞ்சு வண்ணத்திற்கு மாற்றப்பட்டது அந்த வெள்ளிக்கிழமை மாலையில்தான். சீனா செல்லாத, ஏற்கனவே நோய்பரவியவர்களுடன் எத்தொடர்பும் இல்லாத மூவருக்கு சிங்கையில் தீநுண்மி இருந்தது அன்று காலையில் கண்டுபிடிக்கப்பட்டதால் அந்த ஆரஞ்சு நிலை அறிவிப்பு செய்யப்பட்டது. அதைத்தொடர்ந்து காலவரையின்றி வீடடங்கு போடப்போகிறார்கள் என்று வதந்திகள் பரவ அடுத்த சிலமணிநேரத்தில் ஃபேர்பிரைஸ், ஷெங்சியாங் போன்ற பலசரக்குக் கடைகளில் இருந்த அனைத்து அரிசி, நூடுல்ஸ், காய்கறிகள், எண்ணெய், பால், பிற உணவுப்பொருட்கள், கழிவறை திசுத்தாள் உட்பட அனைத்தும் மொத்தமாகக் காலியாயின.



முகநூல், வாட்ஸாப் குழுக்கள் என எதிலுமே இல்லாததால் இந்தக் களேபரங்கள் குறித்து எதுவுமே தெரியாமல், அடுத்தநாள் சனிக்கிழமை காலையில் வழக்கம்போலப் பொருட்கள் வாங்கலாம் என்று அருகிலிருந்த ஷெங்சியாங் கடைக்குச் சென்றால் எல்லாம் துடைத்துப்போட்டது போலச் சுத்தமாக இருந்தது. பதறிக்கொண்டு அருகிலிருந்த ஃபேர்பிரைஸ் போனேன். பத்து கிலோ அரிசியும் ஒரு முட்டைக்கோசும் மட்டும் இருந்தது. அதைமட்டும் வாங்கிக்கொண்டு வீடுதிரும்பினேன். தமிழ்க் கடைகளில் காய்கறிகளின் விலை எகிறின. எங்கும் உணவு கிடைக்காவிட்டால் என்னாகும் என்று நினைத்துப்பார்த்தபோதே கலக்கமாக இருந்தது.

பிப்ரவரி மத்தியிலிருந்து அரசாங்கம் சிங்கை தீநுண்மி பரவல் குறித்து அவ்வப்போது வாட்ஸாப் செய்திகள் அனுப்பத் தொடங்கியது. அதனால் பொய்ச்செய்திகள் ஓரளவுக்கு வலுவிழந்தன என்றாலும் மக்களிடையே பயமும் பாதுகாப்பின்மை உணர்வும் முற்றிலுமாக நீங்கிவிடவில்லை. ஒரேயடியாக இல்லாவிட்டாலும் தங்கள் தேவைக்கதிகமாக பலவகையான பொருட்களை வாங்கி வீட்டில் நிறைத்துக்கொண்டுதான் இருந்தனர்.

அப்போது தீநுண்மிக்கு 'கொவிட்-19' என்ற பெயரும் சூட்டப்பட்டிருந்தது. தடமறிதல் (*contact tracing*) என்ற சொல் அடிக்கடி உச்சரிக்கப்பட்டது. அது என்னவென்று மக்கள் முழுமையாகத் தெரிந்துகொள்வதற்குள் தடமறிதலுக்காக அழைப்பதாகச் சொல்லித் தனிப்பட்டவர்களின் தகவல்களைப் பெறுவதும் அதைவைத்து ஏமாற்றுவதும் என அயோக்கியர்கள் வேலையைத் தொடங்கிவிட்டனர். எரிகிற வீட்டில் பிடுங்கியது லாபம் என்று செயல்படும் இவர்களே நம் காலத்தின் ஆக ஆபத்தான தீநுண்மிகள்!

மார்ச் மாதத் தொடக்கத்திலிருந்தே வீட்டிலிருந்து வேலைபார்க்கத் தொடங்கினேன். வீட்டிலிருந்து வேலை என்பது ஒருமாதிரி உற்சாகமும் ஒருவிதமான நிறைவின்மையும் கலந்துகட்டி இருந்தது. மேலதிகாரிகளும் இதெல்லாம் சரிப்படுமா என்ற ஐயத்துடனிருந்தனர். வேலை எப்போது தொடங்கி எப்போது முடிகிறது என்பது தெரியாமலானது. எதற்கும் இருக்கட்டும் என்று அனைவரும் வழக்கத்தைவிடக் கூடுதலாகவே வேலைசெய்தனர்.

'பாதுகாப்பு இடைவெளி' (*safe distancing*) என்ற அடுத்த புதியசொல் பரவலானது. அன்றாடம் லட்சக்கணக்கில் மக்கள் போவதும் வருவதுமாக இருந்த மலேசியா-

சிங்கை எல்லைகள் மூடப்பட்டன. விமானங்கள் பறப்பது கிட்டத்தட்ட நின்றுபோயிருந்தது. நீண்டகால அனுமதிச் சீட்டுகளில் இருப்பவர்கள் சிங்கையைவிட்டு வெளியேறினால் திரும்பிவருவது இயலாமற்போகலாம் என்று எச்சரிக்கை விடுக்கப்பட்டது. எவ்வளவு வேலைகள் பிழைக்கும் என்ற கேள்வி பூதாகரமாக எழுந்தது. ஒரேமாதத்தில் வாழ்வாதாரத்தின் நிலைத்தன்மை குறித்த கேள்வி எழுந்தபோது, எதிர்காலத்தைக் குறித்த அச்சம் சில்லிடவைப்பதாக இருந்தது.

ஏப்ரல் மாதம் தமிழ்மொழி மாதம். ஆனால் சிங்கையில் வீடடங்கு (*circuit breaker*) தொடங்கியதால் ஊரே வீட்டில் முடங்கியது. வீட்டைவிட்டு வெளியே கிளம்பினால் முகக்கவசம் அணியவேண்டியது கட்டாயமாக்கப்பட்டது. பிறந்த நாள், திருமண நாள் கொண்டாட்டங்கள் எல்லாம் நான்கு சுவர்களுக்குள் மட்டுமே. அது பரவாயில்லை, சில இந்திய நண்பர்களின் பெற்றோர் ஊரில் தவறிப்போய், இறுதிக்கடன்களைச் செலுத்தக்கூட அவர்கள் நேரில் செல்லமுடியாத துயரத்தைக் கேள்விப்பட்டபோது மனம் குமைந்தது. கொடுமையான காலகட்டம் அது!

மலேசிய எல்லை மூடப்பட்டதைத் தொடர்ந்து சிங்கையில் உள்ளவர்களைக்கொண்டே உற்பத்தியைத் தொடரவேண்டிய சூழலில் அலுவலகத் தொழிலாளர்களையும் தொழிற்சாலைக்குள் அனுப்பும் அதிரடி முடிவை நிறுவனம் எடுத்தது. அவர்களுக்கும் வேறு வழியில்லை. அதுவரை வீட்டிலிருந்து பணிபுரிந்த நான் அந்த முடிவினால் வீடடங்கு தொடங்கிய வாரத்திலிருந்து வாரத்திற்கு மூன்று நான்கு நாட்கள் நிறுவனத்திற்குச் செல்லவேண்டியிருந்தது. மூளையுழைப்பிலிருந்து உடலுழைப்புக்கு மாறவேண்டியிருந்தது கடினமாக இருந்தாலும், குறைகடத்தி (*semiconductor*) உற்பத்தித்துறை அத்தியாவசிய வகைமையில் அறிவிக்கப்பட்டதால் வேலை பிழைத்ததே என்கிற ஆறுதல் உண்டானது. ஏப்ரல், மே இரண்டு மாதங்கள் முழுமையாக அப்படியே கழிந்தன.

இந்தக்காலகட்டத்தில் வேலை தொடர்பாகவும் சரி இலக்கிய நிகழ்ச்சிகளும்சரி ஸூம், டீம்ஸ் போன்ற மெய்நிகர் சந்திப்புச் செயலிகள் அதிக அளவில் பயன்பாட்டிற்கு வந்தன. மெய்நிகர் சந்திப்புகளில் நிகழ்ச்சித்தரம் தொடர்ந்து அதிகரித்து வந்ததையும் காணமுடிந்தது. எனக்கும் எதிர்பாராத வாய்ப்பொன்று வந்தது. காலச்சுவடும் கோவை பி.எஸ்.ஜி. கல்லூரியும் இணைந்து நடத்திய மெய்நிகர் கருத்தரங்கில் கலந்துகொண்டு பேசினேன். அதுபோகட்டும், மீண்டும் பிழைப்புக்கு வருவோம்.

முழுமையாக உடலுழைப்பு வேலை என்பது கடினமாக இருந்தாலும் தொடக்கத்தில் மிகுந்த நிறைவை அளித்தது. அதோடு திட்டமிடுதல், செயல்படுத்துதல், பொறுப்பேற்றல் தொடர்பான அழுத்தங்கள் ஏதுமில்லாததால் பரபரப்பான வாழ்க்கை திடீரென்று அமைதியாக ஆகி நிம்மதியாக இருந்தது. ஆனால் அதெல்லாம் சில வாரங்கள்தான். பிரச்சனைகள், சவால்கள் இல்லாமல் ஒன்றையே திரும்பத்திரும்பச் செய்யும் அந்தவேலை சலிப்புத்தட்ட ஆரம்பித்தது. மனிதன் அப்பத்தினால் மட்டும் வாழ்கிறதில்லை என்கிற விவிலிய வாசகம் நினைவுக்கு வந்தது. அவனுக்குப் பிரச்சனைகள் ஏதாவது இருந்துகொண்டே இருக்கவேண்டும்!

நல்லவேளையாக ஜூன் தொடக்கத்தில் வீடடங்கு ஒரு முடிவுக்கு வந்தது. வெளிநாட்டு ஊழியர் குடியிருப்பு, பொதுச்சமூகம், பெருங்குழுக்கள் என அனைத்திலும் தீநுண்மிப்பரவல் கட்டுக்குள் வந்ததால் வீடடங்கு நீங்கியது. பள்ளிகள் திறந்தன. சிங்கை வெளியே செல்லத்தொடங்கியபோது நான் நேரெதிராக மீண்டும் வீட்டிலிருந்து பணிபுரியத் தொடங்கினேன். ஏனெனில் சிங்கையில் பல்வேறு நிறுவனங்களில் வேலையிழந்தவர்கள் மலேசியர்கள் செய்துகொண்டிருந்த வேலைகளை நிரப்பத்தொடங்கினர். பல மலேசியர்கள் குடும்பத்தினரை விட்டுப்பிரிந்து, இருவார தனிமைப்படுத்தலுக்குப்பின், சிங்கையிலேயே தங்கிப் பணிபுரிய முடிவெடுத்து உள்ளே நுழைந்தனர். ஆகவே என்னைப்போன்ற அலுவலகத் தொழிலாளர்கள் மீண்டும் தங்கள் பணிக்குத் திரும்பினர்.

ஜூன் 19 அன்று சிங்கையில் இரண்டாம் கட்டத் தளர்வு நடப்புக்கு வந்தது. ஒரு குழுவாக ஐந்துபேர் வரை கூடலாமென்று அறிவிக்கப்பட்டபோது சிங்கை ஓர் ஆழமான பெருமூச்சு விட்டது. நாங்கள் ஐந்து நண்பர்கள் உண்டுகளித்து உரையாடி ஆறுதலடைந்தோம். தற்காலிக விடுதலைதான் என்றபோதும் அப்போது அது அவசியத் தேவையாக இருந்தது. மனிதனை ஏன் சமுதாய விலங்கு என்கின்றனர் என்பதை நேரடியாக அனுபவித்து உணர்ந்த தருணமது.

2020ஆம் ஆண்டு தன் முற்பாதியை நிறைவுசெய்தபோது, சிங்கை மக்கள், சுமார் ஐந்து மாதங்கள், உயிர் அச்சத்திலிருந்து வாழ்வாதாரத்திற்கான அச்சுறுத்தல்வரை அனைத்தையும் அடுத்தடுத்து உக்கிரமாக அனுபவித்து முடித்திருந்ததால் இதற்குமேல் என்ன ஆகிவிடும் என்கிற வெறுப்பையும் கூடவே எதுவந்தாலும் சமாளிக்கலாம் என்ற நம்பிக்கையையும்



பெற்றிருந்தனர். இதை எழுதும் இந்த டிசம்பர் 2020 இறுதிவாரம் வரை அந்த நம்பிக்கை அப்படியே வலுவாகத் தொடர்கிறது.

டிசம்பர் இறுதியில் மூன்றாம் கட்டத் தளர்வு நடப்புக்கு வருமென்று அறிவிக்கப்பட்டுவிட்டது. ஐந்துபேர் ஒன்றுகூடலாம் என்பது எட்டுபேர் என்று அதிகரிக்கப்பட்டுள்ளது. பணியிடங்கள் மெல்லமெல்ல 'வீட்டிலிருந்து வேலை' ஏற்பாட்டை மாற்றிப் பழைய நிலைக்கு செல்லத் தொடங்கலாம். பெருவிரைவுப் போக்குவரவு வண்டிகளில் பழையபடி காலையும் மாலையும் கூட்டம் அலைமோதலாம். எதையெல்லாம் வெறுத்தோமோ அவற்றின் அருமையை உணர்ந்து விரும்பி ஏற்றுக்கொள்ளவும் தொடங்கலாம். ஆனால் இப்போதைக்கு எல்லாம் கனவுதான்.

வெற்றிகரமாகத் தடுப்பூசி கண்டுபிடிக்கப்பட்டு அது சிங்கப்பூருக்கும் வந்திறங்கிய செய்தியும், இதே கொவிட்-19 தீநுண்மத்தின் இன்னொருவகை இங்கிலாந்தில் பரவுவதாகவும் அது தடுப்பூசிக்குக் கட்டுப்படுமா என்பது தெரியவில்லை என்ற செய்தியும் ஒன்றாகவே கிடைத்துள்ளதால் சிரிப்பதா அழுவதா என்று தெரியவில்லை. இதில் 'வீட்டிலிருந்து வேலை' என்கிற ஏற்பாடு எனக்கு அன்பளிப்பாக அளித்துச்சென்றுள்ள நான்கைந்து கிலோ எடையைக் குறைக்கவேண்டுமே என்கிற கவலை வேறு. இருக்கவே இருக்கிறது புத்தாண்டு உறுதிகள் பட்டியல், அதில் சேர்த்துக்கொள்ள வேண்டியதுதான்.

ஆனாலும் 2020ஆம் ஆண்டில் எல்லாம் கனவுதான் என்று சொல்வதற்கில்லை. எழுதுவதற்கும் வாசிப்பதற்கும் அதிக நேரம் கிடைத்தது ஒரு நல்வாய்ப்பு என்பேன். பிறரோடு ஒப்பிடும்போது வாசிப்புப் பழக்கமுள்ளோருக்கு கொவிட்-19 குறைவான இம்சைகளையே தந்துள்ளதாகத் தெரிகிறது. உடற்பயிற்சி ஆர்வலர்களும் உற்சாகமாகவே இருக்கின்றனர். சில கனவுகளை நனவாக்கும் வாய்ப்பையும் 2020ஆம் ஆண்டு கொடுத்துள்ளது. பழைய வழிகள் மூடப்பட்டபோது புதிய கதவுகள் திறந்துள்ளன.

கடந்த இருபது ஆண்டுகளாக ஒவ்வோராண்டும் அவ்வாண்டில் உலகளவில் அதிகம் புழங்கிய சொல் இதுதான் என்று ஒரு தகவல் பத்திரிகைகளில் குறிப்பிடப்பட்டு வருவதை நீங்கள் கவனித்திருக்கலாம். எடுத்துக்காட்டாக, Y2K, 9/11, tweet, cloud போன்றவற்றைச் சொல்லலாம். 2020ஆம் ஆண்டின் சொல் 'கொவிட்-19' என்பதைச் சொல்லவேண்டியதில்லை. 2021ஆம் ஆண்டிறுதியில் அச்சொல் 'மகிழ்ச்சி' என்று வரவேண்டும். நல்லதே நடக்கும்!

நாங்கள் மெலோபாவில் இறங்கிய தருணம் உலகின் அனைத்துப் பகுதிகளிலிருந்தும் சுமத்ரா தீவுகளில் அமைந்திருந்த இந்நகரம் துண்டிக்கப்பட்டிருந்தது. முந்தைய நாள் சிங்கப்பூரிலிருந்து இறங்கிய ராணுவத்தினர் தற்காலிக ஏர் டிராஃபிக் கண்ட்ரோலரை நிறுவி, போர்க்கால மற்றும் நிவாரண உதவி விமானங்கள் இறங்குவதற்கு தோதான தளங்களை பந்தா ஆச்சே விமானநிலையத்தில் உருவாக்கியிருந்தனர். டிசம்பர் மாதம் என்பது பண்டிகைக்கும் விடுமுறைக் கொண்டாட்டத்திற்கும் என்று நம்பியிருந்த மக்களின் மீது புயல் கோரத்தாண்டவம் ஆடியிருந்தது. எங்கு பார்த்தாலும் இடிபாடுகள். இடிபாடுகளுக்கு மேலே உயிர்பிழைத்தவர்கள். கீழே அழுகிய சடலங்களின் துர்நாற்றம் வயிற்றைக் குமட்டியது. கூட்டமாக பருந்துகள், காட்டு ராஜாளிகள் இடிந்த கட்டிடங்களின் மீது தொடர்ந்து வட்டமடித்து விமானங்களைப்போலப் பறந்துகொண்டிருந்தன. இறந்து கிடந்தவையில் ஒரு பசுமாட்டின் வயிற்றை மூன்று பருந்துகள் கீற, வயிற்றில் பிளாஸ்டிக் கவர்கள் இரத்தமும் சீழுமாக மண்ணில் கொட்டிக்கிடந்தன. வேரோடு தூக்கியெறியப்பட்ட மரங்கள், மின்கம்பங்கள், தலைகீழாகக் கவிழ்க்கப்பட்ட கார்கள், தலைவெட்டப்பட்ட தென்னை மரங்கள் தெருவில் தூக்கியெறியப்பட்டு கிடந்தன. சுங்கானில் மிதக்கவேண்டிய மீன்பிடிப் படகுகளும், சரக்குக் கப்பல்களும் எங்களைத் தெருவிலேயே வரவேற்றன. நான் நடந்துகொண்டிருந்த வீதியில் ஜப்பானிய எழுத்துக்கள் பொறித்த கால்பந்தை உயிர்பிழைத் பூனைக்குட்டி ஒன்று உருட்டிக்கொண்டிருந்தது.

மக்கள் இடிபாடுகளின் மீது அமர்ந்து ஏக்கத்தோடு எங்களைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். செஞ்சிலுவைச் சங்கம், தன்னார்வக் குழுவினர், மருத்துவர்கள் என ஏகப் பரபரப்பு. சுமந்து வந்த மருந்துப்பொருட்கள், ஆடைகள், உணவுப்பொருட்கள், தண்ணீர் போத்தல்கள் என தோள்கள் இரண்டும் வலியெடுத்திருந்தன. தொடர்ந்து நிவாரணப்பொருட்களைச் சேர்ப்பதும், அதை அடைத்து அனுப்புவதுமாய் ஓய்வே இல்லாமல் ஓடிக்கொண்டிருப்பதால் வந்த நோவு. இலங்கையில் உள்ள காலிக்கு நேற்றைய நாள் பொதிகளை ஏற்றி அனுப்பிய உடல்சோர்வே இன்னும் எனக்கு தீரவில்லை. ராணுவத்தினர் வரிசையில் நிற்பவர்களை அதட்டிக்கொண்டிருந்தார்கள். தினசரி செலவுக்கு குடிப்பது குளிப்பது என குடும்பம் ஒன்றுக்கு 5 லிட்டர் தண்ணீர் மட்டுமே. முண்டிய கூட்டத்தை ராணுவ லத்தி ஒழுங்குப்படுத்தியது.

நீலநிற தார்பாலின் சீலை நான்கு மூலையிலும் மூங்கில்கழி குத்திய தற்காலிக நிவாரணக் குடில்கள். பக்கவாட்டில் திறந்துவிடப்பட்ட வழியாக ஒரு பக்கம் நோயாளிகளுக்கான சிகிச்சைப் பிரிவு, இறந்து போனவர்களை அடையாளம் காணும் பிரிவு, உணவு வழங்கும் பிரிவு என அடுக்கடுக்காக பிரிவுகள். எங்களோடு மருத்துவர்கள், தாதியர்கள், மனோதத்துவ நிபுணர்கள் என பலரும் ஒருபக்கம் நுழைந்து மறுபக்கம் வெளியேறிக்கொண்டிருந்தார்கள். உள்பக்கவாட்டுச் சுவரில் ஒட்டப்பட்ட பட்டியல்களில் புகைப்படங்கள். எல்லாம் சிரித்த முகங்கள். சிலர் குடும்பமாக - ஜோடியாக - தனியாக என்று காணாமல் போனவர்களில் உயிர்பிழைத்து சிகிச்சை பெறுவோர் பட்டியல், சடலங்களின் பட்டியல், இதுவரை தகவல் ஏதும் இல்லாதவர்கள் பட்டியல் என புகைப்படத்தில் ஆங்காங்கே பேனா மையால் சிவப்பு வளையமிடப்பட்டிருந்தது. அதில் ஒருபட்டியலுக்குக் கீழே கைக்குழந்தையோடு துவண்டு மயங்கிக் கிடந்த அவளைத்தான் நான் இரண்டு நாட்களாகப் பார்த்துக்கொண்டிருக்கிறேன். வயது 25க்குள் இருக்கும். உண்ணாமல் மெலிந்தும், அழுது கண்ணீர் வற்றியவளாய் பித்துப்பிடித்தவளாய் அமர்ந்திருக்கிறாள். வருவதும் புகைப்படத்தைப் பார்ப்பதும் அதற்குக் கீழேயே உட்கார்ந்திருப்பதுமாய் அவளுக்கு வாடிக்கை. அவளுக்கு மேலே இருந்த புகைப்படத்தை எட்டிப் பார்த்தேன். இவள் முகத்திலும் இவள் கையிலிருக்கும் குழந்தை முகத்திலும் சிகப்பு வட்டமிடப்பட்டு மூன்றாவதாக ஒருவனுடைய முகம் இருந்தது. ஆனால் அதில் வட்டமிடப்படவில்லை. முகத்தில் சிராய்ப்புகள், கையில் காயத்திற்கு இடப்பட்ட கட்டு. குழந்தை தொடர்ந்து ஓயாமல் அழுதுகொண்டே இருந்தது.

'அடி.. தோலாங்..'

அவள் என்னை சட்டை செய்வதாய் உத்தேசம் இல்லை. மெலோபாவிற்கு வந்ததிலிருந்து எத்தனை சடலங்களை அள்ளியிருக்கிறேன். முதியவர்கள், பெண்கள், குழந்தைகள், பிராணிகள். எங்கே பார்த்தாலும் சடலங்கள். நீர் அருந்தவோ உணவு உண்ணவோ மனமின்றி மரணத்தைப் பற்றிய எல்லாவித அபிப்ராயங்களிலிருந்தும் நான் விடுதலையடைந்தவனாக சூன்ய நிலையில் அமர்ந்திருந்தேன். உஸ்தாத் சலீம் என்னை அழைத்து, அவளை அழைத்துக்கொண்டுபோய் தற்போது மீட்கப்பட்ட சடலங்களைக் காட்டச் சொன்னார்.

தெருவில் நாங்கள் இருவரும் நடந்தபோது, ஊரில் கடல்புகுந்து அள்ளிப்போன சோகமே மக்களுக்கு அள்ளிக் குடிக்க முடியாமல் கடலாக

நிற்கிறது. உண்ணாமலே அலைந்து திரிந்துகொண்டிருப்பதால் அவளது கால்கள் நோவுகொண்டு நடந்தாள். என் கால்களையும் மெதுவாகவே எடுத்து வைத்தேன். மெலோபாவில் மிச்சமிருந்தது பைத்துர் ரஹ்மான் எனும் பள்ளிவாசலும், மலையின் மீது ஏறி உயிர்பிழைத்தவர்களும்தான். மிருகசாலையிலிருந்து யானையை அழைத்து வந்து இடிபாடுகளை நீக்கிக்கொண்டிருந்தார்கள். பாகங்கள் சிதைந்த உடல்கள் கருப்புப் பையில் முடிச்சுப்போடப்பட்டு அடுக்கப்பட்டிருந்தன. பராமரிப்புப் பணிக்காக சடலங்களை ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு மாற்றியமைக்கும் முன் அனுபவம் எனக்கு உண்டு. ஆண்- பெண் அங்க அடையாளம் பிரிப்பது, சடலங்களைக் குளிப்பாட்டுவது, வெள்ளைத்துணி கிழிப்பது, அதனை அணிவிப்பது என மாற்றும்போது செய்யவேண்டிய கிரியைகளும் சடலம் அடக்கப்படும் கிரியைகளும் அத்துப்படி. சிக்கிய சடலங்களை மீட்கும் குழுவில் எனக்கு முக்கியப் பொறுப்பு. அவள் யாருடனும் பேசத்தயாராக இல்லை. இருந்தும் முயன்றேன்.

'உங்களுக்கு தெரிந்தவர்கள் யாரேனும் இருக்கிறார்களா?' என்று மூன்றாவது முறையாகக் கேட்டபோதே, இல்லை என்றாள் .

'அம்மா அப்பா?' நீண்ட மௌனம்.

'யாரேனும் இருந்தார்களா?'

'ஆமாம்... மஃப்தூஹ்'. நூருல் பேசத் துவங்கினாள்.

'மஃப்தூஹ் பள்ளிவாசலில் இமாம(தொழுகை) முடித்துவிட்டு, பீச்சிற்கு கூட்டிவருகிறேன் என ஞாயிறு காலையிலேயே என்னையும் ரியாந்தியையும் அழைத்து வந்துவிட்டார். கரையெங்கும் நிறைய குழந்தைகள். மதரசா விடுமுறை அன்று. நன்றாக போய்க்கொண்டிருந்த நேரம். நிலம் மூச்சுவிட்டு எல்லோரையும் உலுக்கியது. கீழே எல்லோரும் விழுந்து கிடந்தோம். ராட்சத கைகள் நிலத்தை பிடித்து ஒரேயடியாக உலுக்குவதாய் ஒரு உணர்வு. முதலில் முயல்வேகம் - இரண்டாவது ஆமைவேகம். எல்லோரும் நிலத்தில் வீழ்ந்து கிடந்தோம். கடலை ஒட்டிய சாலையில் ஊர்வலமாகச் சென்ற திருமணத்தின் மணப்பெண்ணும் மணமகனும் உடன் வந்தவர்கள் என எல்லோரும் நிலத்தில். குழந்தைகள், நடைபாதையில் நடந்தவர்கள் என சரிந்துகிடந்தோம். மக்கள் வீடுகளை விட்டு வெளியே நின்றார்கள். சுமத்ராவின் கடலின் நிலத்தட்டுகள் ஆட்டம் காணுவதும் இயல்பானது. ஆனால் இயல்புக்கு மீறி ஏதோ ஒரு அசம்பாவிதம் எங்களை கூறுபோடக் காத்திருக்கிறது என்று கீழே விழுந்து கிடந்த மஃப்தூஹ் கண்கள் கூறியது. உருத்திரண்ட அவரது கண்களை பார்த்தேன். மொத்தக் கடலும் அதற்குள் கருமையாக சூல் கொண்டிருந்தது. கணநேரத்தில் தென்னைமர உயரத்தில் வந்த அலைகள். பொட்டென அடித்துத் தூக்கியது. எங்களைத் தக்கைகளைப்போல அள்ளிச்சென்றன. அப்போது எந்த சத்தமும் இல்லை. நாங்கள் ஒரு பலகையின் மேல்தளத்தில்



குழந்தையோடு சாய்ந்து கிடக்க, மஃப்தூஹ் அதன் பக்கவாட்டைப் பிடித்து தொங்கிக்கொண்டிருந்தார். மொத்த ஊரையும் நீர் சூழ்ந்துகொண்டிருந்தது.'

'அல்லா.. அல்லா..'. சத்தம். உயர எழும்பிய அலை வேகம் ஊருக்குள் கொஞ்சம் குறைந்து ஆற்றை நோக்கி இழுத்துக்கொண்டிருந்தது. தென்னை மரங்கள், வீட்டுச் சாமான்கள், வாகனங்கள், மதரசா சீருடையோடு சடலமாக குழந்தைகள் என எல்லாரும் எல்லாமும் ஒன்றாக மிதந்துகொண்டிருந்தோம். எங்களைப்போல மொத்த மெலோபா நகரமும் நீரில் மூழ்கியிருந்தது. தரை என்று அந்நாளில் நாங்கள் எதையும் பார்க்கவில்லை. கருப்புப் புகை கலந்த நீர் மட்டுமே எங்களை சுற்றி நின்றது. நகரத்தின் மையமான கோத்த ஜம்பத்தான் பாலத்துக்குக் கீழே போய்க்கொண்டிருந்தோம். யாரோ ஒரு புண்ணியவான் மேலிருந்து கயிற்றைப் போட்டார். நாங்கள் மேலே ஏறிக்கொண்டிருக்கையிலேயே பலகையில் தொங்கிக்கொண்டிருந்த மஃப்தூஹை ராட்சச அலை தூக்கியடித்தது.'

'பெரிய சுழலில் எவரும் தப்பவில்லை. அன்றைய நாள் உயிர் பிழைத்தவர்கள் என்றால் உயரமான கட்டிடத்தில் ஏறி நின்றவர்களும் , மலையை நோக்கி ஓடி தன் உயிரை காப்பாற்றியவர்களும்தான்' எனப் பெரிய துயரக்கதையினைக் கூறி முடித்தாள்.

பள்ளிவாசல் முகப்பில் இடப்பக்கமாக சடலங்கள் அடுக்கப்பட்டிருந்தன. வலப்பக்கம் கருப்புப் பையைப் பிரித்து சடலங்களை பார்த்துக்கொண்டிருந்தார்கள். நடுவே வாயில் வழியாக தொழுவதற்காக மக்கள் போய்க்கொண்டிருந்தார்கள். ஆலயத்தின் உள்ளே நிறைய அழும் குரல்கள். சடலங்களை மொத்தமாக வைத்துத் தொழுகை நடத்தவும் பின்னர் பெரிய பள்ளங்களில் புதைப்பதற்கும் பள்ளிவாசலின் மறுபக்கம் திறந்துவிடப்பட்டிருந்தது. காப்பித்தூள் குழைத்து பூசிய மாஸ்க்கை அணிந்துக்கொண்டு மஃப்தூஹை இருவரும் தேடினோம். எந்த சடலமாவது உயிர்பெற்று அந்த மோதிரத்தைக் காட்டி விடாதா என்று தேடிக்கொண்டிருந்தாள். சடலமாக கிடைக்ககூடாது என்ற ஆசையையும், கணவன் இறந்திருப்பானோ என்ற சாத்தியத்தையும் ஒன்றுசேர்த்தவளாகத் தேடினாள். ஏமாற்றமே எஞ்சியது. இதுவரை நூற்றுக்கு மேல் சடலங்கள் தேடியாகிவிட்டது.

இப்படியான ஒரு சூழலில்தான் என்னையும் அம்மாவையும் விட்டுச்சென்ற தந்தையின் நினைவு வர வேகமாக முகாமுக்குத் திரும்பினேன். தார்பாலினுக்கு எதிரில் உள்ள கடலையே பார்த்துக்கொண்டிருந்தேன்.

'... மாவ் காப்பி.. .. அம்ரின்..'

உஸ்தாத்தின் குரல் எனக்கு காதிலே விழவில்லை.

பாத்தாம் தீவிலிருந்து கெரொபோ - கறிபாப் எடுத்துவந்து பள்ளிவாசல் வளாகத்தில் விற்பதுதான் அம்மாவின் ஆரம்பகட்ட வயிற்றுப் பிழைப்பு. இப்படியானவத்ளைத் திருமணம் செய்துகொண்ட தந்தையின் முந்தைய வாழ்க்கை இருண்ட பக்கங்களை கொண்டது. கேங்ஸ்டர் கும்பலின் சகவாசம், போதைப்பழக்கம் என அவர்சார்ந்த குடும்பத்திடம் இருந்து அவரைப் பிரித்துவிட்டது. தனக்கு எல்லாமுமாய் இருந்த தன் சகபாடி சண்டையில் இறந்துபோக தனிமையும் மூப்பும் ஒருசேர அடைந்ததும் அகவிடுதலையைத் தேடி அலைந்தார். மினாராவில் அடையும் புறாவைப்போல் பள்ளிவாசலில் அடைக்கலமானார். சமூகம் - குடும்பம் - உறவுகள் என எல்லாரும் கைவிட்ட நிலையில் உடன் இணைந்து உடல் ஆரோக்கியமும் அப்பாவைக் கைவிட்டது. அதீத நரம்புத் தளர்ச்சி அவரைப் படுக்கையில் தள்ளியது. அப்பா இறந்தபோது ஈமச்சடங்கிற்கு காசில்லாமல் நானும் அம்மாவும் சடலத்தை வீட்டிலேயே வைத்துப் பூட்டிவிட்டு ஒவ்வொரு வீடாக ஏறி இறங்கிய காட்சி இன்னும் என்னைத் துரத்திக்கொண்டிருக்கிறது. பின்னாளில் அதுவே என்னை சடலங்களை அடக்கம் செய்பவனாக மாற்றியது. வருமானத்தில் என் குடும்பத்தை ஒத்த சாயலாக இருந்தால் அடக்கத்திற்கான ஊதியத்தையும் நான் அவர்களிடம் வாங்குவதில்லை. இதோ பிள்ளையை வைத்துக்கொண்டு நூருல் திரிகிறாளே அதே மாதிரிதான் என்னையும் கையில் பிடித்துக்கொண்டு சிங்கப்பூர்த் தெருக்களில் அம்மாவும் அலைந்திருப்பாள். அப்பாவின் இறப்பிற்குப் பின் எங்களுக்கு யாரும் இல்லை. அம்மாவின் மறுமணத்தைப் பற்றி பேசுவதற்குக் கூட யாரும் இல்லை. படிப்புநேரம் போக பள்ளிவாசலில் என்னைக் கொண்டுபோய் விடுவாள். நினைவு தெரிந்த நாளில் அம்மாவும் போய்ச்சேர்ந்தாள். பள்ளிவாசலில் பராமரிப்பு வேலை, அங்கே மார்க்கக் கல்வி என ஓடிக்கொண்டிருந்தவன், இன்று ரீலிஃப் கேர் வழியாக மருந்துப்பொருட்களோடும், உணவுப்பொருட்களோடும் இங்கே புனரமைப்புப் பணிகளில் செஞ்சிலுவைச் சங்கத்தோடு இணைந்து சடலங்களை அள்ளிக்கொண்டிருக்கிறேன்.

அப்பா. அம்மா. நான். இதோ பெயர் தெரியாத இவள். இன்னும் இந்த நகரத்தில் எத்தனையோ எண்ணற்ற மனிதர்கள் ஒண்டிக்கட்டைகள் தான்.



ஒண்டிக்கட்டைகளுக்கு யார் துணை? யாருமில்லை. நேராகப் போய்க் கேட்டுவிடலாமா... வேண்டாம். மஃப்தூஹ் இருக்கிறானா இல்லையா என்று கூட தெரியவில்லை. இது உசிதம்தானா... தெரியவில்லை. அவள் என்ன நினைப்பாள்... சமூகம் என்ன நினைக்கும்... சமூகத்திற்கு ஒண்டிக்கட்டைகள் பற்றி யோசிக்க நேரம்இருக்கிறதா... யார் சமூகம்? நாம்தான் சமூகம். யாரையாவது வாழவைத்தால் முழு உலகத்தையும் வாழவைத்ததற்குச் சமம் என நபிகள் நாயகம் கூறியிருக்கிறார்களே. யாரெனத் தெரியாதவளையா கட்டிக்கொள்ளபோகிறாய்? ஒண்டிக்கட்டை என்ற பேருக்கு ஊர் பேர் தெரியாதவளைக் கட்டிக்கிட்டான் என்ற பேர் எவ்வளவோ தேவலாம். கேட்டுப்பார்ப்போம். பிடித்திருந்தால் சரி. பிடிக்கவில்லையானால் விலகிவிடலாம். பிடிக்கும் வரை காத்திருக்கலாம். அவகசாம் தரலாம்.

அம்மா.. அவள்.. என முகம் மாறி மாறி எனது இரவுத் தூக்கம் தொலைந்து போனது. ஒருவார காலமும் எனக்குள் தவிப்பு தீயாய் எரிந்துகொண்டிருந்தது.

ரீலிஃப் கேர் குழுவினரை வழியனுப்பும் விழாவிற்காக மெலோபா பள்ளிவாசலில் கூட்டம் கூடி இருந்தது. நீத்தோர்களின் நினைவாக, ஒருவருக்கொருவர் தேற்றிக்கொண்டிருந்த தருணம் நாங்கள் ஊர் திரும்ப ஆயத்தமாகிக்கொண்டிருந்தோம். நான் எழுதி வைத்திருக்கும் முகவரியும் போன் நம்பரும் உள்ள துண்டுச்சீட்டு நெருப்பென என் சட்டைப்பையில் காய்ந்துகொண்டிருந்தது. படகு மெலோபாவின் கரையை வந்தடைந்திருந்தது. வழியனுப்புவதற்காக ஊர்மக்கள் எங்களோடு பள்ளிவாசலில் இருந்து நடக்கத் தொடங்கி இருந்தார்கள். தூரத்தில் பெரிய படகு மற்றொரு முகாமிலிருந்து உயிர் பிழைத்திருப்போரை ஏற்றிக்கொண்டு வந்துகொண்டிருந்தது. நூருல் என்னைக் கடந்து போய்க்கொண்டிருந்தாள். இன்று என்னைப் பார்த்துப் புன்னகைத்த விதம் புத்தம் புதிதாய் இருந்தது. துக்கமாக இருந்தவளின் முகத்தைப் போல் அல்ல. மாற்றம் அவளை சூடிக்கொண்டிருந்தது. மெதுவாக காலம் அவளை மாற்றிப்போட்டிருந்த்து. அவளை விட்டு இறங்கி ஓடிய குழந்தையை சிரித்துக்கொண்டே குழந்தையாய் மாறித் துரத்திக்கொண்டிருந்தாள். இடையிடையே என்னை திரும்பிப் பார்த்துச் சிரித்தாள். எதிர்ப்பார்த்த தருணம் இதுதான் என அவளை நோக்கி கால்கள் சூன்யம் செய்யப்பட்டவனைப் போல நடக்க ஆரம்பித்தேன். ஓடினேன். பக்கவாட்டில் சனங்கள் நடந்துகொண்டிருக்க, முன்னே அவளது குழந்தை. பின்னே அவள். அவளுக்குப் பின்னே நான்.

காகிகத்தைக் கையில் கொடுத்து விட சந்தர்ப்பம் பார்த்துக் கொண்டே நகர்ந்து கொண்டிருந்தேன். படகிலிருந்து இறங்கிய கூட்டத்தில் உயிர் பிழைத்திருப்பவர்கள் அங்கும் இங்கும் தேடி அலை பாய்ந்துகொண்டிருந்தனர் .

நூருல்... நூருல்.. நூருல்.....

அவள் திரும்பினாள். ஆச்சர்யமும் அழுகையுமாய் அந்த உருவத்தை நோக்கி ஓடினாள். தன் கைகளால் முகத்தை மூடி அழுதாள். என்னிடம் அசைவே இல்லாமல் ஸ்தம்பித்துப் போனேன். முழங்காலிட்டு மண்ணில் விழுந்து மேற்குதிசையை நோக்கி அழ ஆரம்பித்தாள்.

‘ஆயா ...’ என குழந்தையும் ஓடியது. அவள் அழுது கொண்டே தழுதழுத்த குரலில்

‘மஃப்தூஹ் .... ‘ என்றாள்.

தன் இரு கைகளையும் நீட்டி அவர்களை நோக்கி மஃப்தூஹ் அழைத்தான். அவனது விரலை பார்த்தேன். அந்த நீலக்கல் மோதிரம் மின்னிக்கொண்டிருந்தது. தூரத்தில் எங்களுக்கான ஃபெர்ரியிலிருந்து உஸ்தாத் பைனல் கால் என்று அழைத்துக்கொண்டிருந்தார்.



● மகேஷ்

மூலம்: "லைப்ரேரியன் மரிச்சதின்பின்னெ" - மலையாளம்

# நூலகரின் மரணத்திற்குப் பின்..



நூலகரின் மரணத்திற்குப் பின்
காலப்பராமரிப்பும் மரித்துப்போனது.
நூலகம் எப்போது திறந்திருக்கும்
எப்போது மூடப்படும் என்று
யாருமே அறிந்திருக்கவில்லை.

ஒரு நள்ளிரவில் வீடு திரும்புகையில்
நூலகத்தின் சாளரங்களில் மெல்லிய வெளிச்சம்.
ஆர்வத்துடன் எட்டிப்பார்த்தால்... தெய்வமே !!!

மெழுகுவர்த்தியின் மங்கலான வெளிச்சத்தில்
படைப்பாளர்களும் அவர்தம் பாத்திரங்களும் சூழ
அங்கேயொரு பிரமாண்ட விருந்தினர் குழாம் !
மஞ்சள் உடையுடன் சுருட்டுப் புகைத்தபடி தஸ்தாய்வெஸ்கி.
வளைந்த கைத்தடியுடன் தகழி சிவசங்கரன் பிள்ளை.
கையில் தொப்பியுடன் சாளரத்தின் வெளியே பார்த்தபடி
பாப்லோ நெரூடா.
மாடிப்படிகளின் கீழே சில இளையர்களுடன்
எம்.கோவிந்தன் தர்க்கித்துக்கொண்டிருந்தார்.
ஆங்கிலம், மலையாளம், ஃப்ரெஞ்ச், ரஷ்யன் எனப்
பலமொழிகளில் பேசிக்கொண்டிருந்தாலும்
வெளியே சிறு சத்தமும் கேட்கவில்லை.
இதற்கிடையே, ஒரு மூலையில்
வட்டக்கண்ணாடியும் ஜிப்பாவும் அணிந்த ஒருவர்
கையில் கண்ணாடிக்கோப்பையை உயர்த்திக்காட்ட,
அலமாரியின் பின்னாலிருந்து ஒருவன்
திரவம் நிறைந்த குவளையுடன் அவரருகே சென்றான்.
அங்கிருந்த மெழுகுவர்த்தி வெளிச்சத்தில்
ஒரு கணம் அவர் முகம் ஒளிர்ந்தது.
எனக்குத் தெரிந்த முகம்... அவரேதான்...
மரித்துப்போன நமது நூலகர் !!

**கவிஞர் பற்றிய குறிப்பு**



கேரளாவின் மலப்புரம் மாவட்டத்தில் ஒரு பள்ளியில் ஆசிரியராகப் பணிபுரியும் கவிஞர் பி.பி.இராமச்சந்திரன், நவீன மலையாளக் கவிதை உலகில் ஒரு தீர்க்கமான குரலாக அறியப்படுகிறார். அதிகம் பேசப்படாத கருத்துகளை வெளிக்கொணர்வது இவரது தனிச்சிறப்பு. 1999ல் சாஹித்திய அகாதெமி விருது பெற்றவர். 'புரட்சிக்கவிதைகள் என்பவற்றில் பிரச்சாரம் தேவையிலை; வாழ்வின் பாட்டை எளிமையாக, ஆனால் உரக்கச்சொல்வதே' என்பது இவர் கருத்து.



● ஷா நவாஸ்



# ருசிபேதம்

இதுவரை மனித குலத்தை தாக்கிய கொள்ளை நோய்கள் தலைகீழ் மாற்றங்களை அனைத்து துறைகளிலும் ஏற்படுத்தியிருக்கின்றன. வரலாறு நெடுகிலும் இதன் சுவடுகள் காணக்கிடைக்கின்றன. ஒன்பதாம் நூற்றாண்டில் இருந்து, மக்கள் தொகை மிக அதிகமான அளவை எட்டிய பதினான்காம் நூற்றாண்டு வரை இறைச்சியும், பால் பொருட்களும் தனி நபர்களுக்கு எட்டாக் கனியாகவே இருந்திருக்கிறது. பெரும்பாலும் தானிய உணவுகளையே பொதுமக்கள் சார்ந்திருக்க மேல்தட்டு மக்களின் உணவில் இறைச்சியும் பாலும் தாராளமாக இருக்க, எளிய மக்களின் சாப்பாட்டு மேசைகளில் சுருட்டி வைக்கப்பட்ட ரொட்டித் துண்டுகள் இடம்பெற்றிருந்தன என பழமையான கையெழுத்துப்பிரதிகள் தெரிவிக்கின்றன. மிகச் சிறந்த கோதுமையைக் கொண்டு அற்புதமான வெள்ளை ரொட்டி செல்வந்தர்கள் வீட்டில் *pain de main* என்ற பெயரில் இருக்க (வீட்டில் தயாரிக்கப்பட்டது' என நேரான அர்த்தத்தில் சொல்லலாம்). தினசரி அடுமனை மூலம் ரொட்டி தயாரிக்கப்பட்டு அல்லது புதிதாகத் தருவிக்கப்பட்டு சமூக இடைவெளியை பெரிதாக்க மற்ற சாதாரண மக்கள் ரொட்டிகளை சில சமயம் ஒரு வாரம்கூட வைத்திருந்து சாப்பிட்டிருக்கிறார்கள். அதிலும் பழைய ரொட்டிகள் மெல்லிய துண்டுகளாக சீவப்பட்டு, சாப்பாடுத் தட்டுகள் போல பயன்படுத்தப்பட்டிருக்கின்றன, அப்படிப்பட்ட தட்டுகளின் மீது உணவு பரிமாறப்பட்டிருக்கிறது. சில சமயம் பழைய ரொட்டிகள் தூளாக்கப்பட்டு சாஸ்களின் அடர்த்தியைக் கூட்ட பயன் பாட்டுக்கு உள்ளாகி இருக்கின்றன, கொதிக்கும் உணவு நிரம்பிய பாத்திரங்கள், பரிமாறும்போது தங்கள் கைகளைச் சுட்டுவிடாமல் இருக்கக் கைகளில் சும்மாடு போல பழைய ரொட்டிகளை பயன்படுத்த, கம்பு, பார்லி, ஓட்ஸ் போன்றவற்றை. கஞ்சியாக்கி குடிக்கும் எளிய மக்களின் வாழ்வை *1348-49*ல் ஏற்பட்ட கொள்ளை நோய் அப்படியே புரட்டி போட்டது. மக்கள்தொகையைப் பெருமளவு குறைத்த அந்த ப்ளாக் டெத் (*Black Death*) கொள்ளை நோய்க்கு *75* முதல் *200* மில்லியன் வரை மக்கள் பலியாயினர்.



அதையொட்டி மக்களின் உணவுப் பழக்கமும் மாறியது. தனிமனிதனுக்குக் கூடுதலாக இறைச்சி கிடைத்து ஐரோப்பா ஒரு 'மாமிசபட்சணி'யாகியது என்பதே உண்மை. பஞ்சமும், உணவுப் பற்றாக்குறையும் தலைவிரித்தாடினாலும், பல மக்களுக்கும் ஐரோப்பாவில்- பிளேக் கொள்ளை நோய்க்குப் பிறகு, தங்கள் உணவைத் தேர்ந்தெடுக்கும் வாய்ப்புக் கிட்டியது. பால் பொருட்களும் மாமிசமும், கொள்ளைநோய் வரை பொதுவாக உணவில் ஒரு சிறிய இடத்தையே பிடித்திருந்தன. மேல்தட்டு மக்களின் சமையலிலும் அவை குறைவாகவே இருந்தன. பால் பொருட்களின் உற்பத்தி அதிகமாக இருந்த இங்கிலாந்து, ஃபிரான்ஸ், பாலாடைக்கட்டியும், வெண்ணையும் உணவில் முக்கியமானவையாகக் கருதப்பட்டன. பாரீஸ், லண்டன், பார்ஸிலோனா, ரோமாபுரி ஆகிய பகுதிகளில் இருந்த சமையற்கலைஞர்கள் மித மிஞ்சிய இறைச்சி புழக்கத்தில் வர ஆரம்பித்த அந்தக் காலத்தை தங்களுடைய திறமையான சமையல் முறைகளை அறிமுகப்படுத்தி உணவு வரலாற்றில் இடம்பெற்றனர். *brouet* (நறுக்கிய இறைச்சி அல்லது மீன்கொண்டு தயாரிக்கப்படும் கஞ்சி), *blanc-manger* (கோழி, பன்றி அல்லது கன்றுக்குட்டி இவற்றின் இறைச்சியைக் கொத்தி, அரிசி மற்றும் சுவைகூட்டும் இதர பொருட்களின் கலவையும் *mortress* (பன்றி, கோழி, அல்லது மீனின் வெண்ணிறத் தசையை வேகவைத்துக்









கொத்தி, பாதாம் பாலில் கலந்து, முட்டை அல்லது ரொட்டித் துணுக்குகளால் அடர்த்தியாக்கப்பட்டது), *rissoles* (இறைச்சி, மீன் அல்லது பழத்தை, மசாலாக்கள் மற்றும் மாவுடன் சேர்த்து உருண்டைகளாக ஆக்கி வறுப்பது) *green sauce* (பார்லி புதினா இவற்றை வினிகரில் ஊறவைத்து, மசாலாக்கள் சேர்த்து, ரொட்டி அல்லது முட்டை மூலம் அடர்த்தியாக்கப்பட்டுச் சமைக்கப்படுவது), ஐரோப்பாவில் இதைப் போன்ற சுவைகூட்டுதல்களுக்கான மசாலாக்கள் பயன்பாடு, சிலுவைப்போர்கள் நடந்த காலத்தில் பெரிய தாக்கத்தை ஏற்படுத்தின. கண்டத்துக்குள்ளும், வெகு தொலைவுக்கு அப்பாலும் வணிகத்தில் முக்கிய அங்கமாக அவை மாறின. அவற்றில் சில இந்தியா, இந்தோனேஷியா மற்றும் சீனாவிலிருந்து தோன்றின. பதினான்காம் நூற்றாண்டின் முதல் நாற்பது ஆண்டுகளில், ஃப்ளாரண்டைன் ஃப்ரான்சிஸ்கோ பெகோலோட்டி (*Florentine Francesco Pegolotti*) என்பவர் அவரது நோட்டுப்புத்தகத்தில் கிட்டத்தட்ட முன்னூறு வஸ்துக்களை 'மசாலாக்கள்' என்று வகைப்படுத்தி இருக்கிறார். இந்தப் பட்டியலில் இருப்பவை இன்றைக்கு 'மசாலாக்கள்' என்று ஒருவர் நினைக்கும் பொருட்கள் மட்டுமே உள்ளடக்கியது அல்ல; பாதாம் போன்ற கொட்டைகள், (பொதுவாக அரைத்துப் பால் எடுக்கப் பயன்படுபவை) பழங்கள், அத்தி, பேரீச்சை, மற்றும் மருத்துவத்துக்கும், வாசனை திரவியங்களுக்கும், அழகு சாதனப்பொருட்களுக்கும் சேர்மானப் பொருட்களாக இருப்பவை ஆகியனவும் அடங்கும். மசாலாப் பொருட்களை தேடி ஐரோப்பியர்களால் மேற்கொள்ளப்பட்ட பயணங்களால், சர்வதேச வர்த்தகமும், கலாச்சாரக் கலப்பினால் ஏற்பட்ட தொடர்புகளும் பெருகின. புதிய உணவுப் பண்டங்களைப் பற்றியும், கடல் கடந்த வணிகத்தின் மூலம் லாபம் ஈட்டும் விருப்பமும், புதுச் சந்தைகளைக் கண்டறிவதை ஊக்குவித்தது. புதிய கண்டுபிடிப்புகளுக்கான பயணங்களை ஆரம்பித்து வைத்தது நவீன காலத்தின் ஆரம்பத்தில் ஐரோப்பியர்கள் மேற்கொள்ளும்வரை, தற்போது அவர்களது மேசையில் இப்போது காணப்படும் பொதுவான உணவுப்பொருட்கள் எதுவுமே அவர்களுக்குத்தெரியாது என்பது உணவு வரலாற்றின் குறிப்பிடத்தக்க உண்மை.



ஹேமா

ஆதிநிலத்து மனிதர்கள் | 7

# இஸ்கந்தர் ஷா



## மலாக்காவின் உருவாக்கம்

படுக ஸ்ரீ மகாராஜாவின் காலத்துக்குப் பின்னர் ஸ்ரீ சுல்தான் இஸ்கந்தர் ஷா சிங்கப்பூராவின் அரியணையில் அமர்கிறான். தனது முதலமைச்சரான *Tun Perpateh Tulus*-இன் மகளை மணக்கும் அவனுக்கு ராஜா கிசில் பெசார் மகனாகப் பிறக்கிறான். சுல்தான் இஸ்கந்தர் ஷாவின் ஆட்சிக்காலத்தில் நிதியமைச்சராக இருப்பவன் சிங்கப்பூராவிலேயே பிறந்து வளர்ந்த சங் ரஞ்சுன தபா. அவனது அழகான மகள் மீது காதல் கொள்கிறான் சுல்தான் இஸ்கந்தர் ஷா. இது ராஜாவின் அந்தபுரப் பெண்களுக்குப் பொறாமையை உண்டாக்குகிறது. அவர்கள் ரஞ்சுன தபாவின் மகளது நடத்தையின்மீது குற்றம் சுமத்துகிறார்கள். சுல்தான் இஸ்கந்தர் ஷாவும் அதை நம்பி பொதுச்சந்தையில் வைத்து அவளைக் கழுவிலேற்றிக் கொல்ல உத்தரவிடுகிறான். இது சங் ரஞ்சுன தபாவிற்குக் கோபத்தை ஏற்படுத்துகிறது. மகள் தவறு செய்தால் தண்டித்திருக்க வேண்டுமேயன்றி பொதுவில் வைத்து அவமானப்படுத்தியிருக்கக்கூடாது என்று அவன் சினம் கொள்கிறான். சுல்தான் இஸ்கந்தர் ஷாவைப் பழிவாங்கும் நோக்கில், சிங்கப்பூராவைக் கைப்பற்றத் தான் உதவுவதாகச் சொல்லி உடனே படையெடுத்து வரும்படி மஜாபாகித்தின் பிதாராவுக்குத் தகவல் அனுப்புகிறான்.

சங் ரஞ்சுன தபாவின் அழைப்பை ஏற்கும் பிதாரா தன் படைவீரர்களைக் கொண்டு சிங்கப்பூராவை முற்றுகையிடுகிறான். அதேநேரம் நிதியமைச்சர் பொறுப்பிலிருக்கும் ரஞ்சுன தபா படைவீரர்களுக்கு உணவளிக்கவென்று வைத்திருந்த அரிசி அனைத்தும் தீர்ந்துபோய்விட்டது என்று சுல்தான் இஸ்கந்தர் ஷாவிடம் சொல்லி அவனை இக்கட்டில் ஆழ்த்துகிறான். மறுநாள் விடியலில் எதிரிப்படையினர் உள்நுழைவதற்கு ஏதுவாக கோட்டை வாயிலைத் திறந்துவிடுகிறான். மஜாபாகித் வீரர்கள் எளிதாக சிங்கப்பூராவைக் கைப்பற்றுகிறார்கள். இதனைத் தொடர்ந்து சுல்தான் இஸ்கந்தர் ஷா மூவாருக்குத் தப்பிச் செல்கிறான்.

இப்படி சிங்கப்பூராவின் வீழ்ச்சிக்கு நேரடி காரணமாய் இருக்கும் சங் ரஞ்சுன தபாவின் நிலத்தில் பின்னாட்களில் நெல் விளைச்சல் குறைகிறது, அவனது வீடு சிதிலமடைகிறது. இறுதியில் அவனும் அவனது மனைவியும் கல்லாய் மாறுகிறார்கள். சிங்கப்பூராவின் அகழிக்கு அருகில் அந்தக் கற்களை மலாய் பதிவேடு எழுதப்பட்ட காலத்திலும் காணமுடிந்தது என்று சொல்லப்படுகிறது.

அதே சமயம் மூவாரில் அதிக ஆரவாரமின்றி தங்கியிருக்கிறான் சுல்தான் இஸ்கந்தர் ஷா. ஒருநாள் இரவு அவனிருந்த இடத்திற்குப் பெருமளவில் உடும்புகள் வந்து சேர்கின்றன. மக்கள் அவற்றை கொன்று கடலில் வீசியபடி இருந்ததையும் மீறி அவற்றின் எண்ணிக்கை பெருகியது. அவற்றின் உடலிலிருந்து துர்நாற்றம் கிளம்பி அவ்விடத்தை நிறைத்ததால் அவ்விடம் அழுகிய பல்லி என்று அர்த்தம் கொள்ளும் பியாவாக் பூசோக் என்று அழைக்கப்பட்டது. அங்கிருந்து வேறு நிலத்திற்கு இடம்பெயரும் இஸ்கந்தர் ஷா, புதிய இடத்தில் கோட்டை எழுப்பும்படி தனது ஆட்களுக்கு

உத்தரவிடுகிறான். அவர்கள் பகலில் கட்டும் கோட்டை ஒவ்வொரு இரவிலும் சிதிலமடைந்தபடி இருக்கிறது. இந்நிகழ்வு தினமும் தொடரவே அவ்விடம் சிதிலமடையும் கோட்டை என்று பொருள்படும் கோத்தா பூரோக் என்று பெயர் கொள்கிறது. அவ்விடத்தையும் விட்டு கிளம்பும் சுல்தான் இஸ்கந்தர் ஷா செனிங் ஊஜோங் என்ற இடத்தை வந்தடைகிறான். அவ்விடத்தில் ஒரு மந்திரியை இருத்திவிட்டு பக்கத்திலிருக்கும் பெர்த்தாம் ஆற்றின் பக்கம் வேட்டையாடச் செல்கிறான். வேட்டையாடிக் களைத்து அங்கு ஒரு மரத்தடியில் அவன் இளைப்பாறும் சமயம் வெண்ணிற சருகு மானொன்று அப்பக்கம் வந்து இஸ்கந்தர் ஷாவின் நாயை எத்துகிறது. அந்தச் சருகுமானின் வீரம் இஸ்கந்தர் ஷாவைக் கவருகிறது. சருகுமான் நாயை அச்சமின்றி தாக்கிய அந்த இடத்தையே தனது நாடாக்கிக் கொள்ள அவன் முடிவு செய்கிறான். தான் இளைப்பாறிய மலாக்கா மரத்தின் பெயரைத் தனது புதிய நகரத்துக்குச் சூட்டுகிறான்.



மூன்று ஆண்டுகள் சிங்கப்பூராவை ஆண்டு அங்கிருந்து வெளியேறிய சுல்தான் இஸ்கந்தர் ஷா, இருபது ஆண்டுகள் மலாக்காவை ஆள்கிறான். அவன் இறந்த பிறகு அவனது மகன் ராஜா கிசில் பெசார், சுல்தான் மெகட் என்ற பட்டப்பெயருடன் மலாக்காவின் மன்னனாக முடிசூட்டிக் கொள்கிறான். லினேஹானின் காலவரையறைப்படி சிங்கப்பூராவை விட்டு 1391-ல் வெளியேறும் சுல்தான் இஸ்கந்தர் ஷா, இரண்டு ஆண்டுகள் நிலங்களில் திரிந்தலைந்து பின்னர் 1393-இல் மலாக்காவைத் தோற்றுவிக்கிறான். மிங் பேரரசின் வரலாற்றுப் பதிவேடுகள், சுல்தான் இஸ்கந்தர் ஷா இறந்தது 1413-இன் இறுதியிலோ அல்லது 1414-இன் தொடக்கத்திலோ என்கின்றன. ஆனால் மலாக்காவின் தொடக்க நாட்களைப் பற்றி அவற்றில் சரியாகப் பதிவு செய்யப்படவில்லை. இதற்குச் சீனாவில் பதினான்காம் நூற்றாண்டின் இறுதியில் நிகழ்ந்த அரசியல் குழப்பமே காரணம் என்று கருதப்படுகிறது.

பண்டைக்காலச் சீனாவில், ஒரு மன்னரின் ஆட்சிக்காலத்தின் போது அவரது அரசவையிலும் தனிப்பட்ட வாழ்விலும் நடந்த நிகழ்வுகள் அதிகாரப்பூர்வமாகக் குறித்துவைக்கப்பட்டு வந்தன. அம்மன்னர் இறந்த பின்னர் அக்குறிப்புகளில் முக்கியமானவை என்று கருதப்பட்ட நிகழ்வுகளெல்லாம் அரசவையின் முக்கிய அலுவலர்கள் முன்னிலையில் தொகுக்கப்பட்டன. அப்படித் தொகுக்கப்பட்ட தரவுகளே இப்போது நாம் படிப்பதற்குக் கிடைக்கின்றன. மிங் சாம்ராஜ்யத்தின் முதல் மன்னனான ஸூ யுஅன் ஸாங் 1398-ஆம் ஆண்டு இறந்ததைத் தொடர்ந்து ஜியன் வென் என்ற பெயரில் ஆட்சி அமைக்கிறான் அவனது பெயரன் ஸூ யுன் வென். அவனது தலைமையை ஏற்காத அவனது சிற்றப்பன் ஸூ டி, ஸூ யுன் வென்னுக்கு எதிராகக் கிளர்ச்சிகளை உண்டாக்கி 1402-ல் அரியணையைக் கைப்பற்றுகிறான். யோங்-ல என்ற பெயர்கொண்ட ஆட்சியை அமைக்கிறான். ஜியன் வென் காலத்தில் பதியப்பட்ட வரலாற்றுத் தரவுகளைத் தனக்குச் சாதகமாக மாற்றியமைக்கிறான். இதன் காரணமாக ஜியன் வென் காலத்தில் மலாக்காவின் துவக்க நாட்களைப்\பற்றி சீனர்கள் பதிவு செய்திருந்தாலும்கூட அவை அழிந்து போயிருக்கும் என்று வரலாற்று ஆய்வாளர்கள் கருதுகிறார்கள்.

மிங் பதிவேடுகளின் படி மலாக்காவைத் தோற்றுவித்தவன் பரமேஸ்வரா. அவனது மகனின் பெயர் மெகட் இஸ்கந்தர் ஷா. இதில் 1405, 1407, 1409 ஆகிய ஆண்டுகளில் மலாக்கா மன்னன் பரமேஸ்வராவின் தூதர் குழு சீனா வந்ததாகப் பதியப்பட்டுள்ளது. 1411இல் பரமேஸ்வரா (*pai-li-mi-su-la*) தனது துணைவியான பரமேஸ்வரி மற்றும் 540 ஆட்கள் கொண்ட குழுவுடன் சீனாவின் நான்கிங்கிற்குப் பயணப்பட்டிருக்கிறான். அந்தப் பயணத்தின் போது சீனப் பேரரசர் யோங்-லவிற்குப் பரிசுப்பொருட்களைக் கொண்டு சென்றிருக்கிறான்

மூன்று ஆண்டுகள் கழித்து 1414ல் சீனாவிற்கு வரும் பரமேஸ்வராவின் மகன் *Mu-kan-Sa-yu-ti-er-sha* தனது தந்தை இறந்து போனதைச் சீன அரசவையில் அறிவிக்கிறான். இவ்விடத்தில் வரும் *Mu-kan-Sa-yu-ti-er-sha* என்ற பெயர் மெகட் இஸ்கந்தர் ஷாவின் திரிபு என்று ஆய்வாளர்கள் கருதுகிறார்கள். பரமேஸ்வராவின் மறைவைத் தொடர்ந்து மெகட் இஸ்கந்தர் ஷாவை மலாக்காவின் அரசனாக அங்கீகரிக்கிறார் சீனப் பேரரசர். அவனுக்குத் தங்கம், வெள்ளி, பூ வேலைப்பாடு செய்த பட்டுத்துணி, தலையாபரணம், இடுப்புப்பட்டை மற்றும் தங்கத்தால் நெய்த துணி இவற்றையெல்லாம் பரிசாகக் கொடுத்திருக்கிறார். பின்னர் 1419-ஆம் ஆண்டு மீண்டுமொருமுறை சீனா சென்று வருகிறான் இஸ்கந்தர் ஷா. இந்த வருகையைத் தொடர்ந்து சீனப் பேரரசர் சியாமின் புதிய மன்னருக்கு மடலொன்றை அனுப்பியுள்ளார். அதுவரையில் சியாமின் மன்னரின் நடவடிக்கையில் திருப்தியுற்றிருப்பதாகத் தொடங்கும் அந்தக் கடிதம், அண்மையில் தனது தந்தையின் இறப்பினைத் தொடர்ந்து இஸ்கந்தர் ஷா மலாக்காவின் அரசனாக முடிசூட்டிக் கொண்டுள்ளதைக் குறிப்பிட்டு, சமீபத்தில் தனது மனைவியையும் பிள்ளைகளையும் அழைத்துக்கொண்டு தனக்கு மரியாதை செலுத்த வந்திருந்த இஸ்கந்தர் ஷாவின் விசுவாசம் சியாம் மன்னரின் விசுவாசத்திற்குச் சற்றும் குறைந்ததல்ல என்று தொடர்ந்திருக்கிறது. எந்தக் காரணமுமின்றி தனது படைகளை மலாக்காவுக்கு எதிராகப் பயன்படுத்தி வந்த சியாம் மன்னனின் செயலைக் கண்டித்து, மலாக்காவின் அரசன் ஏற்கனவே சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியாகிவிட்டதால் அவன் தவறு செய்தால் மன்றத்தில் முறையிடவேண்டுமே தவிர படைகளை அங்கு அனுப்பக்கூடாது என்று முடித்திருக்கிறது.

மிங் பதிவேடுகள் மட்டுமல்லாது பதினாறாம் நூற்றாண்டில் மலாக்கா சென்று சிலகாலம் தங்கிய போர்த்துக்கீசியர்கள் எழுதிய குறிப்புகளிலும்கூட மலாக்காவைத் தோற்றுவித்தவரின் பெயர் பரமேஸ்வரா என்றே பதியப்பட்டிருக்கிறது. மலாக்காவைத் தோற்றுவித்த பரமேஸ்வரா இஸ்லாம் மதத்திற்கு மாறிய போது இஸ்கந்தர் ஷா என்ற பெயரை ஏற்றுக்கொண்டதாகவும் இந்தப் பெயர் மாற்றத்தால் குழம்பிய சீனர்கள் பரமேஸ்வரா மற்றும் இஸ்கந்தர் ஷா இருவரும் வெவ்வேறு ஆட்கள் என்று நினைத்திருக்கக்கூடும் என்றும் ஒரு சாரார் கருதுகிறார்கள்.

மிங் பதிவேடுகளைத் தவிர மற்ற சீனத் தரவுகளிலும் மலாக்காவைப் பற்றிக் காணக்கிடைக்கிறது. வெளுத்த தோல் கொண்ட சீனர்களையும் அடர் நிற தோல் கொண்ட பிற இனத்தவரையும் கொண்ட மலாக்கா முன்பு சியாமின் கட்டுப்பாட்டில் இருந்தது, சீனாவில் இருக்கும் பெரிய கட்டடங்களை ஒத்த கட்டுமானங்களும், எளிய மண்வீடுகளும் அங்கு இருந்தது, மலாக்காவின் அரசனும் மக்களும் இஸ்லாமிய மதத்தைத் தழுவியிருந்தது, மலாக்காவின் அரசன் நீண்ட பச்சை அங்கி அணிந்து, வெள்ளை துணியால் தலையைச் சுற்றியிருந்தது, அங்கு வசித்தவர்கள் இந்தியர்களின் எழுத்துருக்களைப் பயன்படுத்தியது, அவர்கள் ஹண்டு, பொடானிக் போன்ற அமானுட சக்திகளில் நம்பிக்கை வைத்திருந்தது, கழுவேற்றும் தண்டனை அங்கு புழக்கத்திலிருந்தது, இவற்றையெல்லாம் அத்தரவுகள் பதிவுசெய்திருக்கின்றன.

அடுத்து போர்த்துக்கீசியர்களின் தரவுகள் சிங்கப்பூராவின் வீழ்ச்சி மற்றும் மலாக்காவின் உருவாக்கம் பற்றி என்ன சொல்கிறது என்று பார்க்கலாம்.


*References:*

- Admiral Zheng He and Southeast Asia edited by Leo Suryadinata, ISEAS publications (pg 32-36)
- Sejarah Melayu 'Malay Annals' translated by CC Brown.
- Melaka in ming dynasty texts Geoff Wade
- https://eresources.nlb.gov.sg/infopedia/articles/SIP_1540_2009-07-06.html



● மகேஷ்

## திறன்மிகு தபால்பெட்டி !




மின்வணிகம் வெகு வேகமாக வளர்ந்து வருவதால் வருங்காலத்தில் பெரிய அளவிலான தபால் உறைகள் கையாளவேண்டியிருப்பதைக் கருத்தில்கொண்டு, சிங்போஸ்ட் திறன்மிகு தபால்பெட்டிகளை அறிமுகப்படுத்தும் சோதனை முயற்சியில் இறங்கியுள்ளது. அடுக்குமாடிக் கட்டிடங்களில் பெரிய தபால் உறைகள் மற்றும் பொட்டலங்களை வீட்டுக்கு வீடு சென்று கொடுப்பதற்கு நிறைய ஆட்களும் நேரமும் பிடிப்பதால், இதுபோன்ற திறன்மிகு தபால்பெட்டிகள், தபால்தலைகள், உறைகள் என அறிமுகப்படுத்தி, பெறுநர்களுக்கு திறன்பேசியில் செயலிகள் மூலம் செய்திகள் அனுப்பி அவரவர் தங்களது கட்டிடத்தின் கீழ்தளத்திலிருந்து தபால்களை எடுத்துச்செல்லும் வகையில் எளிதாக்கப்படவுள்ளது. இதற்கான முன்னோடித் திட்டம் கிளெமெண்டி வீவக ப்ளோக் ஒன்றில் தொடங்கியுள்ளது.

படம் நன்றி : தி ஸ்ட்ரெயிட் டைம்ஸ்

---

## பொய்க் கோழியா மெய்க் கோழியா?



அடுத்தமுறை சாப்பாட்டுக் கூடத்தில் உங்களுக்குப் பிடித்தமான கோழிச் சோறு (*chicken rice*) சோதனைக்கூடங்களில் விலங்குகளின் செல்கள் மூலம் வளர்தெடுக்கப்பட்ட புரதங்களிலிருந்து தயாரிக்கப்பட்ட கோழி இறைச்சியைக் கொண்டிருக்கலாம். 'ஈட் ஜஸ்ட்' நிறுவனத்திற்கு சிங்கப்பூரில் ஒப்புதல் வழங்கப்பட்டதன் மூலம் ஒரு புதிய பாதை திறக்கப்பட்டுள்ளது. இவ்வாறு சோதனைக்கூடத்தில் தயாரிக்கப்படும் கோழி இறைச்சி மிகுந்த பாதுகாப்பானது, தீய நுண்ணுயிரிகள் அறவே இல்லாதது என்பதோடு இவற்றில் புரதச்சத்தின் தன்மை உயர்ந்தது, அமினோ அமிலங்கள் கூடியது மற்றும் உடலுக்குத் தெவையான தாது உப்புக்களும் அதிகம் என்கிறார்கள். மக்கள் இதன் சுவையை விரும்புகிறார்களா என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்கவேண்டும்.

படம் நன்றி : ஈகோவாட்ச்.காம்

 மேகத்தில் சேவைகள்!




அமேசான், மைக்ரோசாஃப்ட், கூகில் என்ற உலகின் மூன்று மீப்பெருநிறுவனங்களுடன் சேர்ந்து சிங்கை அரசு, சிங்கை மக்களுக்கான தனது மின்னியல் சேவைகளுக்கு, சமீபத்திய மேகத் தொழில்நுட்பங்களைப் (*cloud technolgies*) பயன்படுத்தவிருக்கிறது. கடந்த ஜூன் வரையில் வரி நிர்வாகம் மற்றும் மின்னியல் தேர்வுகள் உட்பட 150க்கும் மேற்பட்ட சேவைகளை மேகங்களுக்கு மாற்றியிருக்கிறது. தனியார் துறையிலிருந்து புதிய தொழில்நுட்பங்களைக்கொண்டு சமூகப் பிரச்னைகளுக்கு ஆகச்சிறந்த தீர்வுகள் கிடைக்குமானால் அரசு அதனை ஏற்க எப்போதும் தயாராகவே இருக்கிறது என்று STACK 2020 நிரலாளர்கள் மாநாட்டின் துவக்க நிகழ்வில் அமைச்சர் திரு.விவியன் பாலகிருஷ்ணன் கூறினார்.

படம் நன்றி : தி ஸ்ட்ரெயிட் டைம்ஸ்

 காந்தத் தசைகள்!



மிகவும் தளர்ந்த முதியோர் மற்றும் அறுவை சிகிச்சைக்கு பின்பான தசை இழப்புக்காக (*mucle loss*) உடலியல்/இயங்கியல் பயிற்சிகள் பல செய்து மீண்டும் தசையை பலப்படுத்தும் காலம் இனிமேல் குறைவாகக்கூடும். நமது தேசியப் பல்கலைக்கழகத்தின் ஒரு ஆராய்ச்சியில் சில குறிப்பிட்ட புரதங்களை காந்தப்புலன்களால் தூண்டுவதன் மூலம் தசைகள் விரைவில் மீண்டும் செயல்பெறும் என்று அறிந்துள்ளனர். *TRPC1* எனப்படும் இந்தப் புரதம் காந்தப்புலத்தால் தூண்டப்படும்போது அதன் கால்சியம் ஏற்கும் திறன் அதிகரித்து, சில என்சைம்களை சுரந்து, திசுக்களும் சீராகி, தசைகள் விரைவாகவே மீண்டும் வலுப்பெறுகின்றன; இதை அவரவர் தன்மைக்கேற்ப கட்டுப்படுத்தவும் முடியும் என்கிறார் இந்த ஆராய்ச்சிக்குத் தலைமை தாங்கிய பேராசிரியர் ஃப்ரான்கோ ஒபெரான்.

படம் நன்றி : தி ஸ்ட்ரெயிட் டைம்ஸ்



முனைவர் ராஜி ஸ்ரீனிவாசன்

# தோற்றமும் ஆளுமையும் - புரிதல் பிறழ்வுகள்

**Appearance Vs Personality**

2



ஸ்வர்யா ராய்களையும், சுஷ்மிதா சென்களையும், நயனதாராக்களையும், அனுஷ்காக்களையும், ஜானி அப்ரகாம்களையும் மட்டும் பார்த்து *What a great Personality* என்று சொல்லி சொல்லி வியந்ததன் விளைவு *Personality* என்பதன் பொருளை அழகான, கம்பீரமான, கண்பார்வைக்கு நிறைவான என்பதாக தமிழில் நாம் மாற்றி விட்டோம். நான் இங்கு பட்டியலிட்டவர்கள் எல்லாம் சிறந்த ஆளுமைகள் என்பதில் ஐயமில்லை. ஆனால் இவர்களையெல்லாம் தோற்றத்தை மட்டுமே வைத்து ரசித்துப் பழகிய சமூகத்திற்கு இவர்களின் அழகைத் தான் *Personality*/ஆளுமை என்று சொல்கிறார்கள் என்பதாக மட்டுமே மனதில் பதிந்து மூன்றடி மூன்றங்குல உயரமுள்ள ஆர்த்தி டோக்ரா, பழுப்பு கலந்த கரு நிறத்தோடு ஆங்கிலப் புலமையற்ற ஒரு படிக்காத மேதை பத்மஸ்ரீ சின்னப் பிள்ளை போன்றோரை சிறந்த *Personality*/ஆளுமையாக பார்க்க



நாம் கற்றுத் தரவில்லை. பயங்கரவாதச் செயலையும், கோவிட் 19ஐயும் ஒருங்கே சிறப்பாகச் சமாளித்து நியூசிலாந்து என்றாலே கேட்போரை மரியாதையுடன் நிமிர வைக்கும் ஜாசிந்தா ஆர்டனையும், வேதியியலில் பெர்லினிலிருந்து முனைவர் பட்டம் வாங்கி, அதிபர் பதவியும் வகித்து கோவிட் 19 உட்பட பல சிக்கல்களை திறம்பட நிர்வகித்து அதிலிருந்து தமது நாட்டை விடுவிப்பதில் வெற்றி கண்டு வரும் ஏஞ்சலா மெர்கலையும், சிறந்த *Personality*/ஆளுமை என்ற பதத்தைப் பயன்படுத்தி வியக்கக் கற்றுக் கொடுத்திருந்தால் மூளையைக் கழற்றி வைத்து விட்டு, பிறக்கும் போது கார்கால மேகம் போல இருந்த அழகான சருமத்தை சலவை செய்து வெளுப்பாக்க பணத்தைக் கொட்டி அழ மாட்டார்கள்.

அதென்னவோ தெரியவில்லை தோற்றத்தில் அழகற்ற ஆனால் சிறந்த ஆளுமைகளாக உள்ள ஆண்களை மட்டும் எவ்வளவோ காலமாக சமூகம் சரியான பட்டியோடு "*Personality*/ ஆளுமை" என அறிந்து வைத்திருக்கிறது. திரு.நானா படேகர் ஆகட்டும், திரு. அமிதாப் பச்சன் ஆகட்டும், திரு.ரஜினி காந்த் ஆகட்டும் இவர்களெல்லாம் சிறந்த *Personality*/ஆளுமை என்று பெருவாரியான சமூகத்திற்கு சொல்லத் தெரிந்திருக்கிறது. ஒரு வேளை *Personality*/ஆளுமை என்றால் அதிக சம்பாத்தியமும், அவர்கள் சார்ந்த துறைகளில் முக்கியமாக திரைத்துறை போன்று மக்களைக் கவரும் துறையில், பெரு வெற்றியும் பெற்றிருக்க வேண்டும் என்று ஆண்களுக்கு மட்டும் விதி எழுதி வைத்திருக்கிறார்களா!



எத்தனையோ முதல்களை சாதித்துள்ள சிங்கப்பூரின் அதிபர் டாக்டர். ஹலீமா யாகூப் அவர்களைப் பற்றி சிங்கப்பூரில் அனைத்து இனத்தினருமே எவ்வளவு சிறந்த ஆளுமை என்று வியக்கிறோம். 2001ஆம் ஆண்டிலேயே சிங்கப்பூரின் மலாய் இனத்தைச் சேர்ந்த முதல் பெண் நாடாளுமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அக்டோபர் மாதம் 2017ல் மலாய் இனத்தைச் சேர்ந்த முதல் பெண் அதிபராக உயர்ந்தவர். ஏழ்மையில் வளர்ந்தவர்; பத்து வயது முதல் ஏதாவது ஒரு வேலை பார்த்தவர். ஐந்து குழந்தைகளுக்குத் தாய். சமூக சீர்திருத்தவாதி. அதிபரான பின்னும் பெரும் வற்புறுத்தலுக்குப் பின் தான் தனது வீட்டு வசதி வாரிய அடுக்குமாடி வீட்டிலிருந்து பாதுகாப்பு காரணங்களுக்காக அதிபர் மாளிகைக்கு குடிபுகுந்தவர். பல சமூக சேவைகளில் இன்றும் முழு வீச்சோடு பங்கு பெறுபவர். முக்கியமாக மன நலம் பாதிக்கப்படோருக்காக பல சேவைகளை முன்னின்று செய்பவர். இவ்வளவு செயல்களை ஒருங்கே செய்யும் ஒரு ஆளுமை உள்ள நாட்டில் நாம் இருக்கிறோமே, இவரைப் பார்த்து *What a Personality* என்று அடிக்கடி வியந்திருந்தால் ஒரு வேளை நமக்கு *Appearance Vs Personality* போன்ற பதங்களை நாம் தவறாகவே பயன்படுத்தி வருவது நமக்குப் புரிந்திருக்குமோ!

ஆளுமை என்ற சொல்லை பயன்படுத்தும் போது இந்தக் குழப்பங்கள் அதிகமாக வருவதில்லை. ஆங்கிலச் சொல்லை தவறான பொருளில் நமது தமிழ்ச் சமூகத்தின் மனதில் பதித்து ஒரு கும்பல் வெற்றி கண்டதை, பொது மக்களாவது உணர்ந்து குறைந்த பட்சம் அகராதியிலாவது அந்த பதத்திற்குப் பொருளைத் தேடிப் பயன்படுத்தி இருக்கலாம். நமக்கு அப்படிச் செய்ய வேண்டும் என்று தோன்றாமலே போய் விட்டது. எதெதற்கோ போராடுகிறோமே இப்படி உளவியல் ரீதியாக பெரும் பிரச்சனைகளை ஏற்படுத்தி இருக்கிறோம் என்பதைப் பற்றிய ஏதாவது உறுத்தலாவது நம்மிடம் இருக்கிறதா?

சிங்கப்பூரின் மாற்றுத் திறனாளி நீச்சல் வீராங்கனை, யிப் பின்னை(*Yip Pin*) மிகச் சிறந்த ஆளுமை என்று புரிந்தவர்கள் எத்தனை பேர்? தசைச் சிதைவு நோயால் சக்கர நாற்காலியில் அடைவு பெற்ற போதும் அதைத் தாண்டியும் பல தங்கப் பதக்கங்கள் வென்று 2018ல் நியமன நாடாளுமன்ற உறுப்பினராக ஆன இவரைப் பற்றி "அட எப்படிப்பட்ட *Personality* இந்தப் போராளிப் பெண் என்று நாம் வியப்பதை நமது மூத்த தலைமுறையினரிடம் மறவாமல் பதிவு செய்ய வேண்டும். பொதுவாக சிங்கப்பூரின் இளையதலைமுறையினருக்கு *Appearance Vs Personality* பற்றிய குழப்பங்கள் ஆங்கிலத்தில் பேசும் போதும்

சிந்திக்கும் போதும் குறைவாகவே இருக்கின்றன. ஆனால் பொதுவாக நமது சமூகத்தில் இந்தப் புரிதல் குறைவாக இருக்கிறது.

பொருளை முழுவதுமாக உணராமல் தமிழில் *Personality* என்ற ஆங்கிலச் சொல்லை பயன்படுத்தும் போது தவறான பொருளிலேயே பயன்படுத்துகிறார்கள். இதற்குப் பெரிதும் காரணமாக இருப்பது தமிழ் நாட்டின் தமிழ் ஊடகங்களின் தாக்கம் என்பதும், தமிழ்த் திரைப்படங்களில் இந்த *Personality* என்ற சொல் கையாளப்பட்டிருக்கும் விதம் என்பதும் வேதனையான உண்மை.

நல்ல தோற்றம் என்பதோ, பொலிவு என்பது அடியோடு தேவையில்லை என்று சொல்வதல்ல இந்தக் கட்டுரையின் நோக்கம். தோற்றம் என்பது புறம் சார்ந்தது. அதனோடு நம்பிக்கை என்ற பதத்தைப் பயன்படுத்திப் பழகி விட்டோம். அகத்தைத் தோற்றம் காட்டும் என்ற அடிப்படை இலக்கணத்தையெல்லாம் தாண்டி, நமது தோற்றத்தின் புற வெளிப்பாட்டையும், பிறர் கண்களுக்கு நாம் அழகாகத் தோன்றுகிறோமா என்பதை மட்டுமே பெருமளவு சார்ந்திருந்து அதனால் சில விரும்பத்தகாத அக விளைவுகளுக்கு வித்திடுவதைத் தவிர்க்க வேண்டும் என்பதும் இந்த கட்டுரையின் உள் நோக்கம். நம்மை அழகுபடுத்திக் கொள்வதோ, நமக்குப் பிடித்த வகையில் நமது தோற்றத்தைப் பராமரிப்பதையோ அது பிறர் கண்களுக்கும் மகிழ்வைத் தருவதையோ கூர்ந்து கவனிக்க வேண்டும். நமக்குப் பிடித்து நம் மனது சரி என்று சொல்வதைப் பின்பற்றி நமது எண்ணங்களை துணிவுடன் வெளிப்படுத்துவது தானாகவே தோற்றத்திலும் ஒரு பொலிவைத் தரும் என்பது மறுக்க முடியாத உண்மை. ஆனால் பிறர் கண்களுக்கு அவர்கள் சொல்லும் இலக்கணப்படி அழகாகத் தெரிவதைத் தலையாயக் கொள்கையாகக் கொண்டு வாழ்வில் செயற்படும் அவலத்திலிருந்து விடுபட வேண்டும். நமது நம்பிக்கையின் ஊற்றாக நமது நேர்மறை சிந்தனைகளையும், நாம் செய்யும் செயல்களையையும், அவற்றின் விளைவுகளையும் கொண்டிருக்கும் போது, அது நம் ஒவ்வொரு வாழும் கணத்தையும் நிர்ணயிக்கும் போது, அது தான் மிகச் சிறந்த ஆளுமையாவதன் அடிப்படை. இதற்குத் தான் *Personality*/ ஆளுமை என்ற பதத்தைப் பயன்படுத்த வேண்டும் என்ற பால பாடத்தை முளையிலேயே கற்பதும் உணர்வதும், பிறருக்கு உணர்த்துவதுமாக நம் வாழ்க்கைப் பயணம் நகருமானால், அங்கங்கு பூஞ்சை பிடித்து பரவி வரும் மனச்சிதைவுக் கூறுகளை அடியோடு வேரறுக்கலாம். ஆங்கிலச் சொல்லைத் தான் தமிழில் பாராட்டும் போது பயன்படுத்துவது என்று முடிவாகி விட்டால் அதை சரியாகப் பொருளுணர்ந்தாவது பயன்படுத்துங்கள் என்று தான் வலியுறுத்த விரும்புகிறேன். இது பொதுவாக நம்மில் பலர் பயன்படுத்தும் சொல்லாடலால் வரும் விளைவை உணரச் செய்வதற்கான சாடல் தானேயொழிய இப்படித் தான் அனைவரும் செய்கிறோம் என்று சொல்லும் குற்றச்சாட்டு அல்ல. இனி *Appearance Vs Personality* என்பதன் வேறுபாடுகள் புரிந்து வாழ்வை நடத்திச் செல்வோம். யார் இவற்றைத் தவறான பொருளில் பயன்படுத்தினாலும் அவர்களுக்கும் புரிய வைப்போம். இரு சொற்களில் என்ன இருக்கிறது என்று சும்மா இருந்து விட வேண்டாம்.



பிரேமா மகாலிங்கம்



# 5 ஈர்த்ததும் நிலைத்ததும்

**வீழ்தலும் எழுதலும் இயற்கையின் நியதி. ஒன்றின் துவக்கம் மற்றொன்றின் வீழ்ச்சி என்பது தொழில்நுட்பம் நமக்குக் கற்றுத் தந்த பாடம்.**



முன்பு பேஜர் என்று ஒரு தொடர்பு சாதனம் இருந்தது. தீப்பெட்டி அளவில்தான் இருக்கும். பொதுவாக பெண்கள் தங்கள் கைப்பைகளிலும், ஆண்கள் தங்கள் இடைவாரிலும் சொருகிக்கொள்வார்கள். வேலைக்குச் செல்வோரையும் வெளிவேலையாக சுற்றுபவர்களையும் குறிப்பாக முகவர்கள் மற்றும் வீட்டில் அதிகம் தங்காதவர்களையும் தொடர்புகொள்வதற்கு இந்தக் கைக்குள் அடங்கும் சாதனம் பெரும் பயனுள்ளதாக திகழ்ந்தது.

1990-களில் கைப்பேசியின் ஊடுருவல், பேஜர் தகவல் சாதனத்தைப் பின்னுக்குத் தள்ளியது. காலச் சுழற்சியில் இப்படியொரு சாதனம் இருந்திருக்கிறது என்ற சுவடுகள் நவீன தொழில்நுட்பத்தால் மறக்கடிக்கப்பட்டிருக்கிறது. புதிய தொழில்நுட்பத்தின் பிறப்பு, ஒன்றின் வீழ்ச்சியிலிருந்து தொடங்குகிறது என்பதற்குப் பேஜர் சாதனத்தின் மறைவு ஒரு நல்ல உதாரணம். முக்கியமான உள்ளூர் தொடர்புக்கு என்றிருந்த தொலைப்பேசி, வெளியூரிலிருக்கும் உறவினர், நண்பர்களுடன் தொடர்பில் இருப்பதற்குப் பரிணாமம் எடுத்தது. இதனால் 'அன்புள்ள அப்பாவுக்கு, அம்மாவுக்கு, நலமா, நலம் அறிய அவா, நிற்க! என்று தொடங்கி, லக்ஷ்மிக்கு கண்ணு குட்டி பிறந்துவிட்டதா? வாழைக் குலை தள்ளிவிட்டதா? தம்பி, தங்கைளின் படிப்பு, அக்காக்களின் கல்யாணம், தாய்மாமன்களைப் பற்றிய அக்கறைகள், அத்தை மகள் பற்றிய விசாரிப்புகள் என்று வெளியூரிலிருந்து தன் நலத்தைத் தவிர்த்து சுற்றுச் சூழல், அக்கம், பக்கம் உள்ளவர்களின் நலன் விசாரிப்புகளுக்குப் பிறகுதான் கடிதத்தின் முக்கியமான சாரம் தொடங்கும். மனதிலிருக்கும் பாசத்தைக் கொட்டி, விருப்பு வெறுப்புகளைப் பொழிந்து தொடர்புக்கு முக்கிய சாதனமாக இருந்த கடிதப் போக்குவரத்துக்கு முற்றுபுள்ளி வைத்ததும் தொழில்நுட்பம்தான்.

அதனால் என்ன, இப்பொழுதும் நாங்கள் குசலம் விசாரித்துக்கொண்டுதானே இருக்கிறோம். முன்பெல்லாம் பதில் வருவதற்கு வாரங்கள் காத்திருக்க வேண்டும். இப்பொழுது உடனுக்குடன் தெரிந்துகொள்கிறோம் என்று நீங்கள் நினைப்பது எனக்குப் புரியாமல் இல்லை. இருந்தாலும், காத்திருப்புகள் குறைந்துவிட்டதால் பொறுமையும் அன்பும் நலிந்து விட்டனவோ என்ற ஐயம் அவ்வப்போது எனக்குள் எழும். பொறுமையும் நேரமும் தான் மிகவும் சக்திவாய்ந்த இரண்டு வீரர்கள் என்று லியோ டால்ஸ்டாய் குறிப்பிடுகிறார். போராட்டங்கள் சூழ்ந்த நம் வாழ்க்கை முறையில் நம்மில் பலரிடம் பொறுமையும் இல்லை, நேரமும் இல்லை. காலச் சுழற்சியில் நாமும் இயந்திர மனிதனைப்போல் மாறிக்கொண்டு வருகிறோமோ என்று அவ்வப்போது தோன்றுவதுண்டு.

தொழில்நுட்ப வளர்ச்சியால் அதிகம் விளைந்தது நன்மையா தீமையா, சைபர் கிரைம் அதிகரிப்பும் இதனால்தான் என்று பலரும் வாதிட்டனர். ஏன் நான்கூட 'இணையும் இணையம்' என்ற தலைப்பில் சைபர் கிரைம் விழிப்புணர்வு பற்றிய கதையை எழுதியிருக்கிறேன். சமுதாயச் சீர்குலைவுகளுக்குத் தொழில்நுட்பமே காரணம் என்றும் மூத்த குடிமக்கள் பலரும் நம்பினார்கள்.

தொழில்நுட்பத்தின் அசுர வளர்ச்சியை யாராலும் கட்டுப்படுத்தமுடியவில்லை. மக்களின் நம்பிக்கைகளை வேரறுத்த நுண்கிருமியால்கூட தொழில்நுட்பத்தின் வளர்ச்சியை அழிக்கமுடியவில்லை. நுண்கிருமியின் வரவும் அதனால் பிறப்பிக்கப்பட்ட நடமாட்டக் கட்டுப்பாட்டு ஆணையும் தொழில்நுட்பத்தின் அவசியத்தை உலக மக்கள் அனைவரும் உணரும்படி செய்தது. அதன் பெருமைகளை உலகமே வியந்து பார்க்க வழி வகுத்தது.

பல மாதங்களாக திட்டமிட்டு நடக்கவிருந்த திருமண வைபோகம், பிறந்தநாள் கொண்டாட்டம், பொருளாதார திட்டமிடல் கூட்டம், கருத்தரங்குகள், ஏன் தமிழ்மொழி மாதம்கூட தள்ளி வைக்கப்பட்டது. உலகமே நிலைகுலைந்து போயிருந்த வேளை. கிருமிப் பரவலை எப்படித் தடுப்பது என்ற தெளிவு கிடைக்க சில நாட்கள் தேவைப்பட்டன.

பள்ளிகளின் தற்காலிக மூடலும், வீட்டிலிருந்து வேலை செய்யும் ஆணையும் கைக்கொடுத்தன. வாழ்நாள் கற்றலை வலியுறுத்தும் நம் நாட்டில், பிள்ளைகளின் கல்வி, நுண்கிருமியின் வரவால் பாழ் ஆவதை விரும்பாத கல்வித்துறை அதிகாரிகள், உடனே மாணவர்கள் தங்குதடையின்றி கல்வி பயில தொழில்நுட்பத்தின் உதவியை நாடினர். அதன்வழி 'வெபினார், சூம்' செயலி மற்றும் இன்னும் பல அதிநவீன தொழில்நுட்பக் கருவிகளின் அறிமுகம் கிடைத்தன.




'வெபினார், சூம்' செயலியின் வருகை மாணவர்களுக்கு மட்டுமல்லாமல், வீட்டிலிருந்து பணிபுரிபவர்களுக்கும் பெரிதும் உதவின. இதனால் தத்தம் இல்லங்களிருந்தே இணையம் வழி அனைவருடனும் தொடர்பில் இருக்க முடிந்தது. மாணவர்கள் பாடங்களை வீட்டிலிருந்தே கற்றுக்கொண்டார்கள், வேலைகள் தங்கு தடையில்லாமல் நடந்தன.

பன்னாட்டு கருத்தரங்கம், இலக்கிய கூட்டங்கள், நூல் வெளியீடு என்று பல பயனுள்ள பயன்பாட்டுக்கு இந்தத் தொழில்நுட்ப கருவிகள் பெரிதும் உதவின. தொழில்நுட்பம் இலக்கியத்தை நிர்ணயிக்கவும் மாற்றி உருவாக்கவும் கைக்கொடுத்தது.

சப்பாத்திக்கு மாவு பிசைந்துகொண்டே இலக்கியப் பேருரையைக் கேட்பேன் என்று கனவில்கூட நான் நினைத்ததில்லை. ஊரடங்கு காலத்தில் எழுத்தாளர்கள் எப்படித் தங்கள் படைப்புக்களை மேம்படுத்தலாம், கற்பனையை வளப்படுத்தலாம், வாங்க பழகலாம் என்று புதியதோர் உலகத்தை நமக்கு அறிமுகப்படுத்திய 'சூம்' செயலி தொழில்நுட்பத்தின் அறிய கண்டுபிடிப்பு.

உள்ளூர் எழுத்தாளர்கள் மட்டுமல்லாமல் உலகத் தரம் வாய்ந்த அயலக எழுத்தாளர்களின் சிறப்புரையைக் கேட்கவும் அவர்களுடன் கலந்துரையாடவும் நல்லதோர் வாய்ப்பு. இட்லி, வடை, சாம்பார், கேசரி, தேநீர், காப்பி போன்ற விருந்தோம்பல் இல்லாமல் வெற்றிகரமான நூல் வெளியீடும் 'சூம்' செயலியின் தயவால் சாத்தியமாயிற்று. முடங்கிப்போன மாதாந்திர இலக்கிய கூட்டங்களும் தடையில்லாமல் நடக்கத் தொடங்கின. இதன் தொடக்கக்காலத்தில் 'சூம்' செயலியை எப்படிக் கையாள்வது என்று தெரியாமல் திக்கித் திணறி பிழையுடன் கற்றுக்கொண்டவர்களில் நானும் உண்டு.

வெங்காயம் உரிப்பதையும், மாவு பிசைவதையும் பிறர் பார்க்காமல் இருப்பதற்காக முகம் காட்ட மறுத்துவிடுவேன். மேலும் முறையாக நடக்கும் கூட்டங்களில் நாமும் அதற்கு உரிய உடை அணிவது முக்கியம் என்று ஒரு சில 'சூம்' கூட்டங்களை அவதானித்து தெளிவுற்றேன். முகம் காட்டாததால் கேள்விகள் கேட்பதில் தயக்கம் ஏற்பட்டது.

மெய்நிகர் உலகில் கூட்டங்களில் கலந்துகொள்வதற்கு நம்மை எப்படித் தயார் செய்துகொள்ளலாம் என்பதற்கு முன் தயாரிப்புகள் தேவைப்பட்டன. *'WiFi'* சேவையின் முக்கியத்துவம், கைப்பேசியில் அல்லது கணிணியின் முன் முகம் தெளிவாகத் தெரியும்படி எப்படி அமரவேண்டும், மேலும் மெய்நிகர் கூட்டம்

நடக்கும்போது நம் குடும்ப உறுப்பினர்கள் திரையில் தெரியாமல் கவனமாகவும் அமைதியாகவும் இருப்பது எப்படி போன்ற நுணுக்கங்களைக் கற்றுக்கொள்ள வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. இணையத்தைப் பயன்படுத்துவதில் தயக்கம் காட்டிய பலரையும் கொவிட்-19 காலகட்டத்தில் ஒன்றிணைக்கும் பாலமாக தொழில்நுட்பம் திகழ்ந்தது. முக்கியமாக திருமணம், பிறந்தநாள் போன்ற கொண்டாட்டங்களில் கலந்துகொள்பவர்களின் எண்ணிக்கை கையளவுதான் என்று இருந்த நிலையில், முகநூலும், வாட்ஸ்ஆப் செயலியும் கைகொடுத்தன. நேரில் கலந்துகொள்ள முடியாதவர்கள் வீட்டிலிருந்தே மெய்நிகர் உலகில் கொண்டாட்டங்களில் கலந்துகொள்ள முடிந்தது. நிச்சயமாக தொழில்நுட்பத்தின் வளர்ச்சியில்லாமல் இது சாத்தியமாயிருக்காது.

ஒருமுறை தெய்வ வழிபாட்டிற்காக பூ வாங்கலாம் என்று தேக்காவிற்குச் சென்றிருந்தேன். செல்லும்போதே பூக்கடை திறந்திருக்குமா என்ற சந்தேகத்தோடுதான் சென்றேன். எங்கள் புத்தகக் கடைக்கு எதிர்ப்புறத்தில் வளையல் மற்றும் ஆபரணங்கள் விற்கும் கடை இருக்கிறது. அதன் வலதுபுறத்தில் இந்தக் குறிப்பிட்ட பூக்கடை இருக்கிறது. கடை திறந்திருக்குமா என்ற சந்தேகத்துடன்தான் சென்றேன். கடவுளுக்கு நேரம் நன்றாக இருந்திருக்கும்போல, பூக்கடை திறந்திருந்தது. ஆனால் பூக்கள் குறைவாகத்தான் இருந்தன.

"என்ன தம்பி, பூ இவ்வளவுதானா?" என்று பரிதாமாகக் கேட்டேன்.

"ஆமாக்கா, இந்தியாவிலிருந்து ஃபிளைட் வரலக்கா, இதுல்லாம் தாய்லாந்து நாட்டிலிருந்து வருது" மல்லிகைப் பூக்களை பச்சை நிற நூலில் தொடுத்துக்கொண்டே சொன்னான்.

"ஏனக்கா கேள்விப்பட்டீங்களா?" பூச் சரத்தைக் காகித பந்தில் சுற்றிக்கொண்டே பீடிகையோடு கேட்டான். பூக்கடையிலிருந்து அமைதியாகக் காட்சியளித்த எங்கள் புத்தகக் கடையை நோட்டமிட்டுக்கொண்டிருந்த எனக்கு அவனது கேள்வி வித்தியாசமாகத் தோன்றியது.

"ஏன், என்ன செய்தி?" அவனிடமிருந்து வரும் தகவலுக்காக ஆர்வமாக அவனைப் பார்த்தேன்.

"பக்கத்து வளையல் கடைக்காரர் இறந்துவிட்டாராம், கேள்விப்பட்டீங்களா? என்றான் பீடிகையோடு. எனக்குத் தூக்கிவாரிப்போட்டது.

"யார், கண்ணாடி போட்டிருப்பாரே அவரா?" வேகம் அதிகரித்துத் துடிக்கும் என் இதயத் துடிப்பைவிட கேள்வி அதிவேகமாக வந்தது.

"எப்படி இறந்தார்? கொரானாவா?" என் தொனி பதற்றமும் பரிதாபமும் கலந்து வெளிப்பட்டது.

"இல்லக்கா வேறே... தற்கொலையா இருக்கலாம்னு சொல்றாங்க, சரியான தகவல் தெரியல" பூச்சரத்தோடு உதிரிப்பூக்களைக் கையளவு எடுத்து பைக்குள் போட்டான்.

அந்தக் கடைக்காரரை மூன்று வாரங்களுக்கு முன்புதான் பார்த்த நினைவு. அரசாங்க ஆணைக்குக் கட்டுப்பட்டு, கடையை எடுத்து வைத்துவிட்டுக் கிளம்பிய நாளில் அவர் கடைப் பணியாளர்களிடம் பேசிக்கொண்டிருந்தார். நாங்கள் கிளம்பியதைப் பார்த்ததும் கையசைத்து விடைகொடுத்தார். நானும் கையசைத்து கட்டை விரலை உயர்த்தி விடைப்பெற்றேன். அதுதான் அவரைக் கடைசியாக பார்க்கிறேன் என்று தெரியாமல் போனது... இளம் வயதுதான், அளவோடு பேசும் அடக்கமான குணம் கொண்டவர். அவருக்கு என்ன பிரச்சனையாக இருந்திருக்கும், எதனால் அவரின் மரணம் நிகழ்ந்தது? என்ற குழப்பத்தோடு கைப்பையிலிருந்து பணத்தை எடுத்து நீட்டினேன். பணத்தை வாங்கி சில்லறையைக் கொடுக்கும்போது இன்னுமொரு அதிர்ச்சியான செய்தியைச் சொன்னான்.

"அதுமட்டுமில்லைக்கா, எங்கப்பாவும் அதே நாளில்தான் இறந்தார்" என்று அவன் சொன்னதைக் கேட்டதும் அதிர்ச்சியில் உறைந்து விட்டேன்.

"என்ன தம்பி சொல்றீங்க, அப்போ ஊருக்குப் போகலையா?" தந்தையின் இறுதி காலத்தில் உடன் இருக்க முடியாத துர்பாக்கியசாலிகளை உருவாக்கிய கொரோனாவை என்ன செய்வது? அவன் கண்களைத் தீவிரமாகப் பார்த்தேன். தந்தை இறந்த சோகத்தை அவன் முகத்தில் தேடினேன். அவன் என் முகத்தைப் பார்க்கவில்லை.

கைப்பேசியை எடுத்துக் காண்பித்தான். "அப்பாவின் இறுதிச் சடங்கை இதில்தான் பார்த்தேன். அதற்குத்தான் எனக்குக் கொடுப்பினை இருந்திருக்கிறது" என்றவன் கைப்பேசியை வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தான். அவனின் மௌனம் நீண்டுகொண்டிருந்தது. இடர்காலத்தில் ஆறுதலான சில வார்த்தைகளைத் தவிர கொடுப்பதற்கு என்னிடம் வேறொன்றுமில்லை. அவனிடமிருந்து விடைபெற்றுக்கொண்டு வீடு திரும்பினேன். வீட்டிற்கு வந்ததும்தான் பூக்களை அங்கேயே விட்டுவிட்டு வந்தது நினைவுக்கு வந்தது.



நித்திஷ் செந்தூர்



# எருமை கிராமம் தேக்கா

தேக்காவில் தலைப்பாகை அணிந்தவாறு மிடுக்குடன் மாட்டு வண்டியை ஒருவர் ஓட்டுகிறார். அதனைச் சித்தரிக்கும் மரபுடைமைச் சிலை அண்மையில் நிறுவப்பட்டுள்ளது. இவ்வாண்டு நவம்பர் 2ஆம் தேதி பொதுமக்களின் பார்வையில் முதல்முறையாகத் தென்பட்ட அந்தச் சிற்பம், அப்பகுதியில் பரவலாக இருந்த கால்நடைகளின் வர்த்தகத்தையும் அதற்குப் பயன்படுத்தப்பட்ட எருமை மாடுகளையும் நினைவுகூர்கிறது. பஃப்ளோ சாலைக்கும் சிராங்கூன் சாலைக்கும் இடைப்பட்ட பகுதியில் இருக்கும் புளோக் 663க்கு முன்புறம் சிலை அமைந்துள்ளது.

ஒரு காலத்தில் மாட்டு வண்டிகள் சிங்கப்பூரின் சாலைகளில் வலம் வந்தன. 20ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதி வரை அந்தக் காட்சியைக் காண முடிந்தது. 19, 20 ஆம் நூற்றாண்டுகளில் பஃப்ளோ சாலையும் அதன் சுற்றியுள்ள பகுதியும் கால்நடை வரத்தகத்திற்குப் பேர் பெற்றிருந்தது. தமிழர்கள் பலர் அந்தத் தொழிலில் ஈடுபட்டிருந்தனர்.

தஞ்சோங் பகார் நகர மன்றம், தேக்கா வசிப்போர் குழுவுடன் இணைந்து இந்த மரபுடைமை பிளாசா திட்டத்தை முன்னெடுத்தது. கலாசார, சமூக, இளையர் துறை, வர்த்தக, தொழில் அமைச்சு ஆகியவற்றுக்கான துணையமைச்சர் ஆல்வின் டான் மரபுடைமை வளாகத்தை டிசம்பர் 15ஆம் தேதியன்று அதிகாரபூர்வாகத் திறந்துவைத்தார். சிலை முப்பரிமாண அச்சிடுதல் முறையில் உருவாக்கப்படுப்பட்டுள்ளது. சிலை முப்பரிமாண அச்சிடுதல் முறையில் உருவாக்கப்பட்டுள்ளது. வடிவமைப்பாளரான ஷேரலின் (*Sheryl*) கைவண்ணத்தில் மரபுடைமை வளாகம் உருவானது.

“குடியிருப்புப் பகுதிக்கு எழிலையும் துடிப்பையும் சிலை சேர்கிறது. அதே நேரத்தில் லிட்டில் இந்தியாவின்

பின்னணியையும் அதன் வரலாற்றைச் சிலை பிரதிபலிக்கிறது. யாரையும் அடிப்படையாகக் கொண்டு சிலை வடிவமைக்கப்படவில்லை. ஒரு காலத்தில் தேக்கா வட்டாரத்தில் கொடிக்கட்டிச் செயல்பட்ட கால்நடை வியாபாரம், அதற்கு உறுதுணையாக இருந்த எருமை மாடுகளின் வரலாறு ஆகியவற்றுக்குச் சிலை மரியாதை செலுத்துகிறது. மாட்டு வண்டிகள் பொருள்கள் ஏந்தி செல்லும்ப போக்குவரத்துச் சாதனங்களாக அக்காலத்தில் திகழ்ந்தன.

மக்கள் நடமாட்டம் அதிகமாக இருக்கும் பகுதியில் சிலையை நிறுவ வேண்டும் என்று திட்டமிட்டோம். எனவே போக்குவரத்து அதிகமாக உள்ள சாலைச் சந்திப்பு முன், சிலை இடம்பெற்றுள்ளது" என்று தஞ்சோங் பகார் நகர மன்றத்தின் பேச்சாளர் தெரிவித்தார்.

சிலை கண்ணாடியிழையால் மறுவுறுதிப் படுத்தப்பட்ட பாலிமார்பிள் வேதிப்பொருளால் செய்யப்பட்டுள்ளது. அதற்கு வெண்கலப் பூச்சு பூசப்பட்டிருப்பதால் சூரிய ஒளியில் தங்கம் போல காட்சியளிக்கிறது. சுற்றுப்பயணிகள் மட்டுமின்றி உள்ளூர்வாசிகளையும் சிற்பம் சுண்டியிழுத்து வருகிறது. பலரும் மாட்டு வண்டியைப் படம் எடுத்து சமூக ஊடகங்களில் பதிவேற்றம் செய்து வருகின்றனர்.

சிலையைச் சுற்றி எட்டுப் பலகைகள் வைக்கப்பட்டுள்ளன. வட்டாரத்தின் சுமார் 200 ஆண்டு வரலாற்றை எடுத்துகூறும் தகவல்கள் அந்தக் கண்காட்சியில் இடம்பெற்றுள்ளன.

- சிராங்கூன் வட்டாரத்தின் வரலாறு
- கால்நடை வர்த்தகமும் அது சார்ந்து செயல்பட்ட குடிசைத் தொழில்களும்
- இதர ஆரம்பத் தொழில்கள்
- லிட்டில் இந்தியாவில் இருக்கும் கடைவீடுகள்
- லிட்டில் இந்தியா சாலை பெயர்களின் வரலாறு
- பாரம்பரியத் தொழில்களில் வளர்ச்சி
- ஜப்பானியரின் ஆட்சியில் சிராங்கூன் வட்டாரம்
- *1900*ஆம் ஆண்டிற்குப் பிறகு மேற்கொள்ளப்பட்ட நகரச் சீரமைப்புப் பணிகள்

ஆகியவற்றைப் பற்றி மேல் விவரங்களை அந்த வரலாற்றுப் பலகைகளின்மூலம் தெரிந்துகொள்ளலாம்.



## கொடிகட்டிப் பறந்த கால்நடை வர்த்தகம்...

சிராங்கூன் வட்டாரத்தில் கால்நடை வர்த்தகமும் பால் வியாராமும் ஒரு காலத்தில் கொடிக்கட்டிப் பறந்தன. குறிப்பாக சிராங்கூன் சாலையின் மேற்குப் பகுதியில் அமைந்துள்ள கண்டாங் கர்பாவ்வைச் சுற்றி அந்தத் தொழில்கள் கோலோச்சின. மலாய் மொழியில் கண்டாங் கர்பாவ் என்றால் 'எருமை கிராமம்'.

*1880*-களின் எருமை மாட்டு வண்டிகளும் மாட்டுக் கொட்டகைகளும் பரவலாக அப்பகுதியில் காணப்பட்டன. கசாப்புக் கடைகளும் அதிக எண்ணிக்கையில் அங்கு இருந்தன.

இரண்டாம் உலகப் போருக்கு முன்னர், டன்லப் ஸ்டிரீட்டில்தான் இடையர்கள் (மாடுகளை மேய்ப்பவர்கள்) கூடுவர். அங்கு பாலைக் கறந்து, பண வசதி அதிகம் இருந்த குடியிருப்பாளர்களிடம் விற்பர். விடியற்காலை முன்னர் பால் விநியோகிக்கப்படும். ஆரம்பக் காலங்களில் நடைப் பயணமாகச் சென்று



பால் விநியோகிக்கப்பட்டது. பின்னர் மதிவண்டியில் பால் விற்கப்பட்டது.

கால்நடைகள் இறைச்சி, பால் ஆகியவற்றுக்கு மட்டும் பயன்படுத்தப்பட்டாமல் முக்கியப் போக்கு வரத்துச் சாதனமாகவும் அவை கருதப்பட்டன. 1900-களின் தொடக்கக் காலம் வரை, அவை போக்குவரத்தில் முக்கியப் பங்கி வகித்தன.

### பசும்பாலை விற்ற தமிழ்ப் பால்காரர்கள்...

பஃப்ளோ சாலை, சண்டர் சாலை ஆகியவற்றைச் சுற்றி நிறைய தமிழ்ப் பால்காரர்கள் காணப்பட்டனர். கால்நடைகளுடன் அவர்கள் வீடு வீடாகச் சென்று பசும்பாலை விற்றனர். இந்தியர்கள் அதனை வாங்கி தயிர் செய்தனர். சிராங்கூன் சாலையில் இந்தியப் பெண்கள் வீடு வீடாகச் சென்று தயிரை விற்கும் காட்சி பரவலாகக் காணப்பட்டது.

### வர்த்தகத்தில் முத்திரை பதித்த இருவர்...

சிராங்கூன் வட்டாரத்தில் காலூன்றிய கால்நடை வர்த்தகத்தில் இருவர் முத்திரை பதித்தனர். அதில் ஒருவர் ஐசக் ரபேல் பெலிலியோஸ் (*Isaac Raphael Belilios*). அவர் சிங்கப்பூருக்கு 1860-களில் வந்தார். குதிரைகள், கால்நடை தீவனம் ஆகியவற்றைப் பெருமளவில் இறக்குமதி செய்வதற்கு ஒரு வர்த்தக நிறுவனத்தைத் தொடங்கினார். கால்நடைகளை வைத்திருக்க அதிகமான கொட்டகைகளையும் அவர் சிராங்கூன் வட்டாரத்தில் வைத்திருந்தார். 1890-களில் பெலிலியோஸ் சாலையைச் சுற்றியுள்ள பகுதியை மேம்படுத்த அவர் முக்கிய காரணகர்த்தாவாக விளங்கினார்.

மற்றொருவர் இந்திய முஸ்லிம் செல்வந்தரான மூனா காத்தர் சுல்தான். அவர் 1870-களில் சிங்கப்பூரை வந்தடைத்தார். 1890-களில் சிங்கப்பூர் கால்நடை வர்த்தக நிறுவனத்தை (*Singapore Cattle Trading Company* ) ஆரம்பித்தார். 1898ஆம் ஆண்டில் கிளைவ் ஸ்ட்ரீட்டிக்கும் சுங்கை ரோட்டுக்கும் இடைப்பட்ட பகுதியில் தமது கொட்டகையை நிறுவினார். ஆஸ்திரேலியாவிலிருந்து தனது கால்நடைகளை இறக்குமதி செய்தார். 1900-களில், அவரது வியாபாரம் பன்மடங்கு பெருகியது. 'கால்நடை மன்னன்' என்று அழைக்கப்பட்டார்.

1921-ஆம் ஆண்டில் பெலிலியோஸ் இயற்கை எய்தினார். அதன் பின்னர் அவரது குடும்பமும் மூனா காத்தர் சுல்தானும் இணைந்து *'Belilios and Kader Sultan & Co'* என்னும் நிறுவனத்தைத் தொடங்கினர்.

### வீழ்ச்சி கண்ட வியாபாரம்...

1900-களில் கால்நடை வியாபாரம் உச்சத்தில் இருந்தது. அந்தச் சமயத்தில் சில பிரச்சினைகள் தலைதூக்கத் தொடங்கின. 1902-ஆம் ஆண்டில் கண்டாங் கர்பாவ் வட்டாரத்தில் செயல்பட்ட எருமை வர்த்தகத்தால் சாலைகள் பாதிக்கப்படுவதாகக் குறைகூறல்கள் எழுந்தன. அதன் காரணமாக உரிமையாளர்கள் தங்களின் எருமைகளை மற்ற இடங்களுக்குக் கொண்டு செல்ல உத்தரவிடப்பட்டனர். அதே நேரத்தில் உரிமக் காலம் நிறைவடையும்போது, புது உரிமம் வழங்கப்படமாட்டாது என்று அவர்கள் எச்சரிக்கப்பட்டனர்.

1920-களில் கண்டாங் கர்பாவ் வட்டாரம் நெரிசல்மிக்க பகுதியாக உருவெடுத்தது. அப்போது அங்கு கூடிய இடையர்கள் தங்களின் தொழிலை காத்தோங் பகுதியில் இருக்கும் கம்போங் ரெடேக்கு(*Kampong Reteh*) இடம் மாற்றினர்.

இதர வர்த்தக நடவடிக்கைகளுக்காக, அப்பகுதியில் இருந்த சதுப்பு நிலங்கள் அகற்றப்பட்டன. அதன் காரணமாக 1930-களில் கால்நடை வர்த்தகம் படிப்படியாகக் குறைய ஆரம்பித்தது. 1936ஆம் ஆண்டில் அரசாங்கம் கண்டாங் கர்பாவ் பகுதியில் உரிமையாளர்கள் கால்நடைகளை உயிருடன் வைத்திருக்கக்கூடாது என்ற தடையைப் பிறப்பித்தது. அதனால் *'Belilios and Kader Sultan & Co'* நிறுவனம் நொடித்துப் போனது. அது சிராங்கூன் வட்டாரத்தின் கால்நடை வர்த்தகத்தை முடிவுக்குக் கொண்டு வந்தது.

**தகவல்கள்: தஞ்சோங் பகார் நகர மன்றம், லிட்டில் இந்தியா மரபுடைமைப் பாதை புத்தகம் (*Little India Heritage Trail*)**



● ரியாசத் அலி

# கடந்த பாதைகளின் சுவடுகள்

**கா**ட்டுக்குள் இட்டுச் செல்லும் ரயில் பாதை. பயணிகளின் படபடப்போ அவசரமோ இல்லை. கிளமெண்டி சாலைக்குக் கீழே அமைந்துள்ள தண்டவாளங்கள் எங்கு செல்கின்றன? அவற்றின் வரலாறு என்ன? தற்போது வெறிச்சோடிக் காணப்படும் நிலைக்கு முன்னதாக அவைகள் கடந்தபாதைகள் என்ன? இவற்றிற்கான விடைகளைத் தேடும் பணியில் களமிறங்கினேன்.

1965ஆம் ஆண்டு திறக்கப்பட்ட புக்கிட் தீமா இரயில் நிலையத்திலிருந்து ஜூரோங் தொழிற்பேட்டைக்குச் சென்ற அந்தத் தடத்தின் நீளம் சுமார் 19 கிலோ மீட்டர். சிங்கப்பூருக்குச் சொந்தமான இரண்டு இரயில் பாதைகளில் ஒன்று வடக்கு நோக்கி மலேசியாவிற்குச் சென்றது. மற்றொன்று மேற்கு நோக்கி ஜூரோங்கிற்குச் சென்றது. கிளமெண்டி சாலைக்குக் கீழே ஓடும் பாதை, ஜூரோங் இரயில் பாதைக்குச் சொந்தமானது. சதுப்பு நிலங்களும் காடுகளும் ஜூரோங் வட்டாரத்தில் அதிகமாகக் காணப்பட்ட 1960-களின்







தொடக்கத்தில்தான் ஜூரோங் தொழிற்பேட்டையாக உருமாறத் தொடங்கியது. சிங்கப்பூரின் இரண்டாவது துறைமுகத்தை அமைக்க ஜூரோங் வட்டாரம் அப்போது பரிந்துரைக்கப்பட்டது. அங்கு சாலை வசதி சொற்பமாக இருந்ததால் அந்த வட்டாரத்தைத் துரிதமாக மேம்படுத்துவதற்கான தேவை எழுந்தது. அதனைத் தொடர்ந்து ஜூரோங் இரயில் பாதை நிறுவ முடிவெடுக்கப்பட்டது .

ஜூரோங் நகராண்மைக் கழகமும் மலேசியாவின் KTM நிறுவனமும் இணைந்து 5.5 மில்லியன் வெள்ளியை அந்தத் திட்டத்தில் முதலீடு செய்தன. கட்டுமானப் பணிகள் 1963ஆம் ஆண்டில் தொடங்கி இரண்டே ஆண்டுகளில் முடிவடைந்தன.

மலேசியாவிலிருந்து சரக்குகளை ஏற்றிக்கொண்டு ஆலைகள், சுத்திகரிப்பு நிலையங்கள் ஆகியவற்றைக் கடந்து அந்தப் பாதை மேற்கு கரையோரப் பகுதியில் அமைந்திருக்கும் துறைமுகம் ஒன்றில் அந்தப்பாதை முடிவடைந்தது. பெரிய அளவிலான சரக்குகளையும் மூலப்பொருட்களையும் கொண்டுசெல்வதற்கு இந்தப்பாதை பயன்படுத்தப்பட்டது.

நாளடைவில் ஜூரோங்கின் சாலைக் கட்டமைப்பும் மேம்பட்டது. கனரக வாகனங்களும் லாரிகளும் சாலைகளில் பயணித்ததால், 1974ஆம் ஆண்டில் வெறும் 12800 டன் எடை சரக்குகளின் போக்குவரத்திற்கு ஜூரோங் இரயில் பாதை உபயோகப்படுத்தப்பட்டது. இரண்டிலிருந்து மூன்று மில்லியன் டன் எடையிலான சரக்குகளைக் கொண்டு செல்ல அப்பாதை பயன்படுத்தப்படும் என்று எதிர்பார்த்ததை விடவும் அது மிக குறைவு. அது குறித்த செய்தியை New Nation நாளேடு 1975ஆம் ஆண்டில் வெளியிட்டது. மேலும் 1980-களின் இறுதியில் ஆயர் ராஜா விரைவுச்சாலை கட்டப்பட்டதால் ஜூரோங் இரயில் பாதை தேவையற்றுப் போனது. 1992ஆம் ஆண்டு ஜூரோங் இரயில் சேவை நிறுத்தப்பட்டு, அடுத்த ஆண்டே ஜூரோங் இரயில் நிலையம் இடிக்கப்பட்டது. தற்போது பாதுகாக்கப்பட்டு வரும் புக்கிட் தீமா இரயில் நிலையம், மேற்கு நோக்கிச் சென்ற ஜூரோங் இரயில் பாதையின் தொடக்கம் என்று சொல்லலாம். அதே நேரத்தில் புக்கிட் தீமா இரயில் நிலையம் மலேசியாவிற்குச் செல்லும் முக்கிய இரயில் பாதையிலும் அமைந்திருந்தது. தஞ்சோங் பகாருக்கும் உட்லண்ட்ஸுக்கும் இடையிலான சேவையை அது வழங்கியது. அடுத்து தஞ்சோங் பகார் - உட்லண்ட்ஸ் இடையிலான ரயில் பாதையும் 2011ஆம் ஆண்டு ஜூலையில் மூடப்பட்டது.

தற்போது எஞ்சி இருக்கும் பெரும்பாலான தண்டவாளங்களை அதிகாரிகள் அகற்றியுள்ளனர். இருப்பினும் அந்தப் பாதையின் சுவடுகள் இன்னமும் எஞ்சியுள்ளன. டிசம்பர் விடுமுறையில் வெளிநாடுகளுக்குச் செல்லும் வாய்ப்பு அதிகமாக இல்லாததால் சிங்கப்பூரர்கள் பலர் உள்ளூரில் மறைந்திருக்கும் இப்படிப்பட்ட அரிய இடங்களின்மீது ஆர்வம் செலுத்தி வருகின்றனர். இரயில் ஓசை இல்லாவிட்டாலும் தண்டவாளத்தின் தடங்கள் வரலாற்றின் மீதான ஆசையைத் தூண்டியுள்ளன.



● யவனிகா ஸ்ரீராம்



# டெடிபியரும் பார்பி பொம்மையும்

## நீதி பாண்டியின் கவிதைகள்



மனிதன் எப்பொழுதும் உணர்ச்சியின் பாற்பட்டவன். அவனது கவிதைகள், வாசகராய் சிலரை அருகழைக்கின்றன. உதிர்ந்த அல்லது பருவகாலத்தில் பூத்த மலர்களை அல்லது வாத்சல்யமான ஒன்றை அவரிடம் மொழியாக்கிக் காட்டுகின்றான். அவரோ மகிழ்ச்சியடைகிறார். அத்தகைய அனுபவம் தனக்கும் உண்டென்று திளைக்கிறார். அவரது முகபாவங்கள் மாறுகின்றன. கச்சிதமாகச் சொல்லிவிட்டீர்கள் எனப் பாராட்டுகிறார். உண்மையில் அது, கவிதைகளின் அன்றாடத்தில் நிகழும் எழுதும்xவாசிக்கும் சம்பவத்தில் ஒரு பகுதிதான். கடந்த காலம் என்பது இப்போது இல்லை. இருப்பதோ, நிகழ்காலம் அல்லது நிகழ்கணம்தான். அதில் புத்திபூர்வமாக கிடைக்கும் வாய்ப்புகளுடன் வாழ்ந்துகொள்வதே சாத்தியம். பிறகு ஒருவர் வாழ விரும்பிய லட்சியங்களின்பேரிலான சுமைகளை ஒருவேளை சுமந்திருந்தால், அந்த நிகழ்காலம்கூட கைதவறிப் போய்விடத்தான் செய்யும் என்பார், ஜிட்டு கிருஷ்ணமூர்த்தி. நமக்கான குருவிற்கும் லட்சியங்களுக்கும் காலத்தில் காத்திருப்பதே மிகப்பெரிய சோகம் என அறிந்ததிலிருந்து விடுதலையில் சொல்வார்.

ஒரு கவிஞன் இப்படியான தற்கணங்களைத்தான் எழுதுகிறானா? அல்லது அகத்திற்கும் புறத்திற்குமான பொருள்கோடல்களால் முற்றிலும் நிறைக்கப்பட்டு அதன் முடிவுகளைத் துரத்துகின்றானா? அல்லது இடம், காலத்தில் எங்கு நிலவுகிறான். மேலும் அவனே கவிதைகளும் எழுதுகிறான். எழுதவந்ததற்கும் எழுத்தில் வந்ததற்கும் இடையே கவிதை பறந்துபோய்விடுகிறது என்றும். எவற்றின் நடமாடும் நிழல்கள் நாம் என்றும், , அவரின் சாயை இவரிடம் இவரின் சாயை அவரிடம் என்று மனித குணங்களை அடுக்கிப் பார்ப்பதில் நம்மிடையே ஒப்பீட்டு ரசனைகள், அழகியல் போதங்கள் இயல்பாகவே தோன்றிவிடுகின்றன. நாம் எல்லோரும் எந்த நூற்றாண்டின் மனிதர்கள் என்பது ஆய்விற்குரிய விஷயம். 21ஆம் நூற்றாண்டு என்பதும் கூட ஒரு வசதிக்காகத்தான். குணாம்சங்களை வெளிப்படுத்துகிறபோது காலக் குழப்பம் தோன்றுகிறது.கிமு கால கற்கால மனித குண,ரூபங்களை உடையவர்களை இந்த நூற்றாண்டிலும் காணலாம்.



இந்த உலகியலோ பொதுவான குடிமை அரசியல் அமைப்பை பேணுகிறது. அத்தகைய அன்றாடத்திலிருந்து உருவாகும் அனைத்தும் ஞாபகத்தில் மொழியாகும்போது நினைவு மறதிகளே மீண்டும் மறு உறுதியாக்கம் ஆகின்றன. அந்தவகையில், ஒரு மொழியின் படைப்பு, புத்தாக்கமான புனைவிற்கோ, மாற்று விஷயங்களுக்கோ மெனக்கிடாத இருத்தலியல் ஏற்புகள்கொண்ட ஒரு தொகுதியாகத்தான் இறுதியில் ஆகிவிடுகிறது.

இவ்வளவும் நீதிப்பாண்டியின் கவிதைகளைப் படித்துக் கொண்டிருந்தபோது பக்கவாட்டில் தோன்றிய மனவோட்டங்கள்தான். சிங்கையில் நீதிபாண்டி, . நிகழ்கணம், தற்கணம் என்பதன் நடைமாதிரியாக அவரைச் சொல்லலாம். ஒரு நகரின் வரைபடத்திற்குள் சதா அலைந்துகொண்டிருக்குமொரு இளைஞன், மழையும் வெயிலுமான தட்பவெப்பத்தில் வாகன ஓட்டியாக, உணவுக்கடை கல்லாவில், குறும்படத்திற்கான பேச்சுகளில், தனி என்ற அமைப்பில் மற்றும் வாசகர் வட்ட செயற்பாடுகளில் இயங்கியபடியே, இடையே கவிதை எழுதுவதும், ஊரில் மகள் அவநிதாவின் கனவுகளுக்குள்ளும் ஒருநடை போய்விட்டு வந்துவிடும் அவரது வேகம் ஆச்சரியமூட்டக்கூடியது.

அவருடைய முதல் தொகுப்பு 'அவநிதாவின் சொல்', ஒரு குழந்தையின் வளர்ச்சிப் போக்குகளை புகைப்படமெடுப்பதுபோல கவிதைப்படங்களை எடுத்த ஒரு சின்னஞ்சிறிய துவக்க உலகிற்கான ஆல்பம் எனலாம். ஒரு தந்தை, மகளுடன் காணும் உலகம் அவ்வளவு எக்களிப்புடன் எழுதப்பட்டுள்ளது. குறிப்பாக, பெண் குழந்தைகள் அழகியல் அம்சங்களையும், ஆண் குழந்தைகள் தைரியத்தின் அம்சங்களையும் கொண்டிருக்க வேண்டுமென எதிர்பார்ப்பது நமது வளர்ப்புமுறையில் இருக்கும் நடவடிக்கைகள்தான் எனினும், இக் கவிதைகளில் இயங்கும் தந்தை மனம் வேறாக இருக்கிறது.

'ஓயாது நடந்த அவனியின் பாதங்களை
தொட்டுப் பார்க்கிறேன் குட்டிப் பாதங்களில்
வீட்டின் நீள அகலங்கள் சுருண்டு கிடக்கின்றன'

'கண்ணாடியில் இருக்கும் அவனியைப் பார்த்து
வெளியே இருக்கும் அவனி சிரிக்கிறாள்'

'டெடி பியரும் பார்பி பொம்மையும்
களைத்துப் போய் உறங்கும் கட்டிலில்
அவநிதா விளையாடிக் கொண்டிருக்கிறாள்'



குழந்தைகள் சதா விளையாடியபடி இருக்க, தந்தையோ எல்லா நேரமும் உழைத்தபடி அலைய, காலமோ பொம்மைகள்போல் அயர்ந்து உறங்குகிறது.மேலும்

'அவனி, சொற்களுக்காகச் சிரமப்படுவதில்லை'

'உங்களைப்போலவே சிரிக்கிறாள் என்கிறார்கள்
நான் ஒருமுறை சிரித்துப் பார்த்தேன்
அவநிதாவைக் காணவில்லை'

என்றெல்லாம் பூரிப்பு உண்டாக்கும் இக்கவிதைகளுக்கிடையே,

'ஒவ்வொரு வீட்டின் தொலைபேசி அழைப்புகளை
ஒரு சிறுமி திறக்கிறாள் உடன் நாம் பேசும் மொழியையும்'

-என்று புறவயமாக கவிஞருக்கு விலகவும் தெரிகிறது.



நீதிப்பாண்டியின் கவிதைகளில், பல அப்பார்ட்மென்ட்வாசிகளின் குழந்தைகளும் வந்துபோகிறார்கள். மின்தூக்கியின் அருகே புல்வெளியில் விளையாடும் அவ்வகையான வளாகங்கள் இன்று இந்தியப் பெருநகரங்கள் எங்கும் பெருகிவருவதைக் காண்கிறோம்.

**'புளோக்கின் தரைத் தளத்திற்கு அழைத்துச் சென்றால்**
**அப்பு கூடுதல் உற்சாகம் அடைகிறான்'**

'அயாஸும் பூனைக்குட்டியும்' என்ற இந்த ஒற்றை வரி, கவிஞருக்கு உற்சாகமடைய போதுமானதாக இருக்கிறது. குழந்தைகளின் உலகத்தில் எட்டிப் பார்த்திருக்கும் இக் கவிதைகள், நாம் எவ்வளவு முதிர்ந்தவர்களாகிவிட்டாலும்கூட அந்த உலகத்தின் நினைவுக்குள் மீட்சியடைவது வைக்கிறது. 'ஆலிஸ் த ஒண்டர்லேண்ட்', 'குட்டி இளவரசன்', 'டோட்டா சான்' என்றெல்லாம் இன்றுவரை வரும் கதைகளும் திரைப்படங்களும் வளர்ந்தவர்களும் பார்க்கத்தானே உருவாக்கப்படுகிறது. உண்மையில் பெரியவர்கள் தவறு செய்வது இயல்புதான் என்று, சிறியவர்களே இப்போது நமக்குச் சொல்லத் தொடங்கிவிட்டார்கள். நீதிப்பாண்டியின் கவிதையில், நான் நிரந்தரமானவன் எனும் கடவுளின்முன்பு குழந்தை வாய்பொத்திச் சிரிக்கிறது. எவ்வளவோ நிகழ்காலங்கள், தற்கணங்கள் அவர்களின் வாழ்வில். காயம்பட்டு அழும்போதுகூட உலகமே அவர்களை ஆறுதல்படுத்த தயாராகிவிடுகிறது. இல்லையா? குழந்தைகள்தான் எப்போதும் தங்களின் அன்றாடத்தில் இருக்கிறார்கள்போல.

•••

நீதிப்பாண்டியின் இரண்டாவது தொகுப்பு, 'மாயா மது உதயா' என்ற தலைப்பில், காதலின் சிறுதூறல்போல, தானே பேசி மகிழும் தொனியில்



வந்திருக்கிறது. காமம் மற்றும் காதல் உணர்ச்சிகளை, லிபிடோ எனும் உடலியல் உந்தம் என்பார், பிராய்டு. அது பல்வேறுவகையில் மனித ஆற்றலை தீர்மானிக்கிறது என்பது அவரது வாதம். அகமும் புறமுமான உலகின் பல்வேறு செவ்வியல் கவிதைகளை இவ்வாறு ஆய்வு செய்தவர்களும் உண்டு. தன்னுணர்ச்சிகள் சார்ந்து இயங்கும் மொழியில் இறங்கிவைக்க காதலும் காமமுமே ஆதாரமான குவியங்களை உருவாக்குகிறது. இத்தொகுப்பில், நீதிப்பாண்டி கவிதைகளைக் கண்டடைந்திருக்கிறாரோ என்னவோ, அதில் எனக்கு நம்பிக்கை இல்லை. ஆனால் ஒரு தனிமனித வெறுமைக்கிடையே, இத்தகைய காதல் உணர்ச்சிகள்தான் தன்னை சோர்வற்றவனாக இருக்க உதவுகிறது என்பதற்காக அவர், சிறுசிறு வாக்கியங்களில் அதை எழுதிப்பார்த்த முயற்சிகள் என்றே இத்தொகுப்பைக் கூறலாம்.



**'எவ்வளவு பதட்டத்தோடு பேசினாய்**
**அந்த ஸ்தனத்தில் அதிர்ந்துபோகிறேன்'**

**'உதயா இவ்வளவுநேரம் பேசிக்கொண்டிருந்தது**
**என்னுடைய நிலையில் இருந்துதான்'**

**'மது இன்னும் தீர்ந்தபாடில்லை**
**இந்தக் கொட்டும் மழையும் அதற்குப் பின்னான தாகமும்'**

காதல் கவிதைகளின் தொடக்கநிலை முயற்சிகளாக இந்தக் குறிப்புகள், மாயா மது உதயா எனும் பெயர்களால் சூழப்பட்டிருக்கிறது. உருவிலி பெண்கள் என்பது ஒரு பெரும் புனைவு. அது, இல்லாததைக் கண்டதாகவும், கண்டதை இல்லாததாகவும் ஆக்கும் சித்து நிலை உடையது.சமீபத்தில் வெளியான ஸ்ரீஷங்கரின், 'திருமார்புவல்லி' எனும் கவிதைத் தொகுதியில் உருவிலிப் பெண்ணை தியானிக்கும் கவிதைகளைக் காணலாம். நீதிப்பாண்டி, இத்தொகுப்பில் உருவிலிப் பெண்ணை அனுமானிக்கிறார். அது, ஒருதலைப்பட்சமாகவே பேசுகிறது.கவிதைகளைப்பொறுத்தவரையில் இது போதாது என்பதே என் அனுமானம். அவருடைய சமீபத்துக் கவிதைகளை வாசித்தேன். அவை இத் தொகுப்பைவிட கூடுதலாக தொழிற்பட்டிருக்கின்றன

உலகின் சரிபாதிப் பெண்களுமாய் ஆண்களுமாய் பேசிவரும் இலக்கியங்கள் அதில் இடம்பெறும் ஆவலாதிகள், இன்ப துன்பங்கள், பிறப்பு இறப்பு எனும் நாடகத் திணைகள், அன்றாடங்களாய்த் தொடர்வது, விதியின் கைகள் மேலும் எழுதிச்செல்லும் எனும் போக்கில்தான் அருமையாகின்றன.



சிவகங்கை காளாப்பூரில் பிறந்து அயலக வாழ்வை மேற்கொண்டிருக்கும் நீதிப்பாண்டி, காணொளிகளில் விமர்சன பூர்வமாக கவிதைகள் குறித்துப் பேசுகிறார். ஒருவகையில் அயலகத் தமிழ் இனங்களின்இலக்கிய ஈடுபாடு என்பது தாயகத் தொன்மத்தொடர்புகளில் தன்னை நிலைநிறுத்தும் ஒரு அடையாளச் செயல்பாடு என்பதும் அதுவே அரசியல் நனவிலியாகவும் அவர்களுக்குள் இருப்பதை இங்கு சுட்டிக்காட்டலாம்.

அப்பிடியான ஆர்வமுடையவரும் அத்தகைய இலக்கியப் படைபாளிகளுடனும் நண்பர்களுடனும் கிடைக்கும் ஓய்வுநேரத்தைச் ஆக்கப்பூர்வமாகச் செலவிட்டு பணித் தடங்களிலும், கலைத் தடங்களிலும் செயலூக்கம் உள்ளவராக நீதிப் பாண்டி இருப்பது, அவரை இன்னும் கவிதையில் மட்டுமல்லாது கலாச்சாரத்தளங்களிலும் புதிய திசைநோக்கிச் செலுத்தும் என்று நம்புகிறேன்.